# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...

## ...இதர, டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேளை தவறாத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.
இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.
காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.

**நீங்களே கண்டுகொள்வீர்கள்**

இதை வெளுத்தது வேறுவித டிட்டர்ஜெண்ட பார்



இதை வெளுத்தது ஸூப்பர் ரின்




அதிக வெளுப்பூட்டும் சக்தி படைத்தது ஸூப்பர் ரின்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லிண்டாஸ்-RIN.40-2012 TM



# கரை சேரும் ஓடங்கள்

ஏலேலோ.... ஜலசா....
ஏலேலோ....

துணிஞ்சு நீயும்
துடுப்பைப் போடு
சின்னத்தம்பி
சீக்கிரம் போவோம்!

நள்ளிரவிதுதான்....
நடுக்கடலிதுதான்....
நாமே ஜெயிக்கிற
காலமும் இதுதான்....

வேதனே விரக்தி
எல்லாம் நெறஞ்சது
சுவாசத்திலே...!

நாம வேகமாய்த்
தள்ளுறோம்
ரோசத்திலே...!

புயலும் காத்தும்
இடியும் கூத்தும்
நெறஞ்சு நிற்குதடா....

இங்கே வீரம் நெறஞ்ச
விவேகத்தோடே
படகு விரையுதடா....

கரை மேலே
சூரியனும்
கண்ணயர்ந்து
படுத்திருப்பான்....!

அலேமேலே
நாம போயி
அசக்க அவனே
எழுப்பிடுவோம்....

ஆகாசத்திலே
மீன்களெல்லாம்
ஆழ்ந்து போயித்
தூங்கிறுதும்—

கரையோரக்
குடிசையெல்லாம்
சிம்னிகளாய்
விழிச்சிருக்கும்....

துணிஞ்சு நீயும்
துடுப்பைப் போடு
சின்னத்தம்பி
சீக்கிரம் போவோம்..

ஏலேலோ....., ஜலசா
ஏலேலோ....
ஏலேலோ...

-சூர்யகாந்தன்

புகைப்படம்: என். ராமகிருஷ்ணு

# மீனாட்சி – புரத்துக்குப் பிறகு...

தமிழ் நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள மீனாட்சிபுரத்தில் ஹரிஜனங்கள், முஸ்லீம்களாக மதம்மாறியதைத் தொடர்ந்து ராமநாதபுரம், தஞ்சாவூர் போன்ற மாவட்டங்களிலும் ஹரிஜனங்கள் மதம் மாறியிருக்கிறார்கள். ''ஜாதி இந்துக்களின் கொடுமையால்தான் நாங்கள் இந்து மதத்தை விட்டு முஸ்லிம் மதத்துக்குச் செல்கிறோம்'' என்பது இவர்கள் சொல்லும் காரணம். தமிழ் நாட்டில் பரவிவரும் இந்த ''மத மாற்றம்'' பாண்டிச்சேரி மாநிலத்திலும் பரவ ஆரம்பித்திருக்கிறது. பாண்டிச்சேரி நகரை அடுத்துள்ள திம்மநாயக்கன் பாளையம் என்ற ஊரில் உள்ள சுமார் 1500 ஹரிஜனங்கள், முஸ்லீம் மதத்துக்குச் செல்லப் போவதாக, பத்திரிகைகளில் செய்தி வெளியானவுடன் உண்மை நிலவரம் என்ன என்பதைக் கண்டறிய திம்மநாயக்கன் பாளையத்துக்குச் செல்கிறோம்.

பாண்டிச்சேரியிலிருந்து 8 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது இந்தக்கிராமம். கிருஷ்ணமூர்த்தி என்ற ஹரிஜனத் தலைவரின் பெயரால்தான் பத்திரிகைகளில் அறிக்கைகள் வெளிவருகின்றன. ''கிருஷ்ணமூர்த்தியைப் பார்க்கவேண்டுமே'' என்கிறோம். சற்று நேரத்தில் கிருஷ்ணமூர்த்தி வருகிறார். 36 வயது உள்ள இந்த முன்னாள் ராணுவ வீரர்தான் தற்போதைக்கு அந்த ஊர் ஹரிஜனங்களின் பிரதிநிதி. ஒல்லியாக இருந்தாலும், குரலில் நல்ல பலம்தெரிகிறது. ஆக்ரோஷமாகப் பேசுகிறார். ஹரிஜனங்களின் கஷ்டங்களை, குறைகளை எடுத்துரைக்கிறார். அவருடன் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்துவிட்டு ஹரிஜன காலனியை விட்டு ஊருக்குள் வருகிறோம். ரெட்டிமார்களின் பெரிய பெரிய வீடுகள் காட்சியளிக்கின்றன. முதலில் நம்மைப் பார்ப்பவர் அனந்த கிருஷ்ண ரெட்டியார் என்பவர்தான். அன்புடன் அழைத்து அவர் வீட்டுக்குக் கூப்பிட்டுச் செல்கிறார். அங்கு வைத்தியலிங்க ரெட்டியார் என்பவரையும் சந்திக்கிறோம். இருவரும் ஜாதி இந்துக்கள் கட்சியை எடுத்துக் கூறுகிறார்கள். எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டு கடைசியில் வைத்தியலிங்க ரெட்டியாரிடம், ''நீங்கள் களத்து மேட்டுக்கு வாருங்களேன். அங்கே கிருஷ்ணமூர்த்தியிடம் நேரில் பேசுங்களேன்'' என்கிறோம். இதற்கு அவர் தயங்காமல் ஒப்புக் கொண்டு எங்களுடன் களத்து மேட்டுக்கு வருகிறார். அவரைப் பார்த்ததும் கிருஷ்ணமூர்த்தியும் முகத்தை அலம்பிக் கொண்டு ஓடி வருகிறார்.



✖ இருபது வருடங்களாக மழையையும், வெய்யிலையும் மட்டுமே தாங்கிக் கொண்டிருக்கும் ஹரிஜனஹாஸ்டலின் அடிக்கல்

அருகில் உள்ள செங்கல் சூளையின் கொட்டகையில் நின்றுகொண்டே அவர்கள் உரையாடல் தொடங்கியது:



✖ ஹாஜி அப்துல் சலாம்

**வைத்தியலிங்கம்:** என்ன கிருஷ்ணமூர்த்தி. ஜாதி இந்துக்களின் கொடுமை தாங்காமல் தான் மதம் மாறப் போவதாய்ப் பத்திரிகைகளில் வந்து கொண்டிருக்கிறதே அப்படி என்னகொடுமைகளை நாங்கள் செய்து விட்டோம்?

**கிருஷ்ணமூர்த்தி:** கோவில் திருவிழாவின் போது, ஹரிஜனங்கள் தாக்கப்பட்டதைக் கொடுமை இல்லை என்று கூறுகிறீர்களா?

**வை:** கோவில் திருவிழாவில் நடந்த தகராறுக்குக் காரணம், தனிநபர் பிரச்னைதான். சாராயக் கடையில் ஏற்பட்ட தகராறுதான் கோவில் திருவிழாவில் பிரச்னையாக உருவெடுத்தது. ஒப்புக்கொள்கிறாயா?

**கி:** இது சரிதான் என்றாலும், தாக்கப்பட்டவர்கள் ஹரிஜனங்கள்தானே?

**வை:** நான்தான் சொல்லிவிட்டேனே! தனிநபர் பிரச்னை என்று! அதை நீ பெரிதுப் பிரச்னை என்று கூறி ஒரேயடியாக ஜாதி



✖ இந்தக் கோவிலின் முன் கூடித்தான் ஹரிஜனங்கள் முஸ்லீம்களாக மாற முடிவு செய்திருக்கிறார்கள்



✖ விவாதம் நடக்கிறது....
இடது: வைத்தியலிங்கம் ரெட்டியார்; அனந்த கிருஷ்ண ரெட்டியார்
வலது: கிருஷ்ண மூர்த்தி (ஹரிஜன தலைவர்)

இந்துக்களைத் தாக்கி அறிக்கைகள் வெளியிடுவது சரியல்ல.

கி: போலீஸார் அந்தச் சமயத்தில் சரியான நடவடிக்கை எடுக்கவில்லை. தாழ்த்தப்பட்டவர்களின் பிரச்னைகளில் அவர்களுக்கு அக்கறையே இல்லை.

வை: இந்தத் தொகுதி எம். எல். ஏ. கூட தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவர் தானே. அவருடைய வெற்றிக்கு நாங்கள் பாடுபடவில்லையா? (திம்மநாயக்கன்பாளையம் ''ஏம்பலம்'' என்ற சட்டமன்றத் தொகுதியைச் சேர்ந்தது. இது ஒரு ரிசர்வ் தொகுதி).

கி: நீங்கள் சொன்னீர்கள் என்பதற்காகத் தான் அவருக்கு வோட்டுப் போட்டோமே தவிர, தனிப்பட்ட அந்த மனிதருக்காக அல்ல!

வை: உங்கள் இனத்தவரையே சட்ட மன்ற உறுப்பினராக வைத்துக் கொண்டு உங்களுக்கு வேண்டியவற்றைஅரசாங்கத்திடம் சாதித்துக் கொள்ள முடியவில்லை என்றால், நாங்கள் என்ன செய்ய முடியும்?

கி: நாங்கள் எந்த அரசியல்வாதியையும் நம்பத் தயாராக இல்லை.

வை: 1972ல் வெள்ளம் வந்தபோது ஹரிஜனக் காலனியிலிருந்த உங்களை எங்கள் வீட்டுக்கு அழைத்துச் சென்று சாப்பாடு போட்டு வெள்ளம் வடிந்த பிறகு உங்களைத் திருப்பி அனுப்பினோமே? எங்களைக் கொடுமைக்காரர்கள் என்று கூறுகிறாயே?

கி: நீங்கள் அந்தச் சமயத்தில் செய்த உதவி நிச்சயமாகப் பாராட்டத் தக்கதுதான். ஆனால் குத்தகை நிலங்களுக்குத் தண்ணீர் விடாமல் பயிர் செய்வதைத் தடுத்தீர்களே! இது எந்த விதத்தில் நியாயம்?

வை: குத்தகைக்காக விட்ட நிலங்களை நீங்கள் அரசாங்கத்திடம் காட்டி, கடனைப் பெற்று அதை உருப்படியாகச் செலவழிக்காமல் கண்டபடி செலவழித்தீர்கள். குத்தகை விட்டவர்களுக்கும் பணம் தரவில்லை. அரசாங்கத்துக்கும் பணம் கட்டவில்லை. இது மாதிரி நீங்கள் நடந்து கொண்டதால் தான், குத்தகைக்கு நிலத்தைக் கொடுத்தவர்கள் ஹைகோர்ட் வரை சென்று நிலத்தை உங்களிடமிருந்து திரும்பப் பெற நேர்ந்தது. நீங்கள் ஒழுங்காகப் பணத்தைச் செலுத்தி யிருப்பீர்களேயானால் இந்த நிலைமை ஏற்பட்டிருக்காதே.

கி: இடையில் சில வருடங்கள் பயிர் வைத்ததில் மிகுந்த நஷ்டம் உண்டானதால்தான் பணத்தைக் கட்ட முடியவில்லையே தவிர ஏமாற்ற வேண்டும் என்பது எங்கள் நோக்கமில்லை.

வை: இப்போதுகூட சொல்லுகிறேன் நீங்கள் பணத்தை ஒழுங்காகக் கட்டி வருகிறேன் என்று உறுதிமொழியைத் தருவீர்களானால்



✖ கிருஷ்ண மூர்த்தி ✖ வைத்தியலிங்க ரெட்டியார்

நான் நிலச் சொந்தக்காரர்களிடம் பேசி உங்களுக்குத் தண்ணீர் விட ஏற்பாடு செய்கிறேன்.

இ: இது பற்றி நான் மற்றவர்களுடன் பேச வேண்டும்.

வை: வேறு என்ன பிரச்னை உங்களுக்கு?

இ: குடும்பக் கட்டுப்பாடு செய்து கொண்டதற்குப் பிரதியாகத் தருவதாகக் கூறப்பட்ட மனைப் பட்டாவை வழங்க அரசாங்கம் எந்த விதமான முயற்சியையும் செய்யவில்லை. இரண்டு வருடப் போராட்டத்துக்குப் பிறகுதான் நிலத்தை ஆர்ஜிதம் செய்தார்கள். ஆனால் அது பிரித்துக் கொடுக்கப்படாமல் அப்படியேஇருக்கிறது.

வை: இந்த மனைப் பட்டா வழங்குவதற்கு நிலத்தைக் கொடுத்தவர்கள் ஜாதி இந்துக்கள்தானே! உங்களுக்கு நல்லது நடக்கத்தானே அவர்கள் உதவி செய்து இருக்கிறார்கள். அப்படி இருக்க 'ஜாதி இந்துக்கள் கொடுமை' என்று சொல்வதில் என்ன நியாயம் இருக்கிறது?

இ: எழுபத்தைந்து சத விகிதம் நாங்கள் எதிர்ப்பது அரசாங்கத்தைத்தான். இருபத்தைந்து சதவீதம்தான் இந்த ''ஜாதி இந்துக்கள் கொடுமை'' பற்றிய பிரச்னையெல்லாம்!

வை: அரசாங்கத்தை எதிர்த்து நீ போராட்டம் செய்வதிலோ அல்லது கோரிக்கை விடுவதிலோ நியாயம் இருந்தால், அதற்கு நாங்களும் உதவி செய்யத் தயார்! அதை விட்டு விட்டு, மதம் மாறுகிறேன் என்று அரசாங்கத்தை மிரட்டுவதில் என்ன லாபம் இருக்கிறது?

இ: மதம் மாறுகிறோம் என்று நாங்கள் மிரட்டவில்லை. எங்களுக்குத் தெரிந்து, முஸ்லீம் சமுதாயத்தில்தான் ஏற்றத் தாழ்வுகள் இல்லை!

வை: நீ 'பாயா'க மாறுவதால், உனக்கு இத்தனை நாள் கொடுத்து வந்த மரியாதையை நாங்கள் உயர்த்திவிடப் போவதில்லை. நாங்கள் இதுவரை எப்படி அன்பாக இருந்தோமோ அது மாதிரிதான் இருக்கப் போகிறோம். ஆனால் நீங்கள் மதம் மாறுவதால் அரசாங்கத்தின் பல சலுகைகளை இழந்துவிடுவீர்கள்!

இ: சலுகைகள் எங்களுக்குத் தேவையில்லை. சுயமரியாதைதான் எங்களுக்குத் தேவை.

வை: இதே கிராமத்தில் 10 குடும்பங்கள் கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்தார்களே, அவர்களின் வாழ்க்கை நிலையில் எந்த முன்னேற்றமும் இல்லாமல் இருப்பதை நீ கவனித்தாயா? முஸ்லீம் மதத்தில் சேர்ந்தால் உடனே உன் பிரச்னை எல்லாம் தீர்ந்து விடுமா?

இ: நீங்கள் சொல்வது தவறு. முஸ்லீம் மதத்தில் எல்லோரையும் சரிசமமாகப் பாவித்துக் கொள்வார்கள்.

வை: நீ ''சுன்னத்'' செய்து கொள்ள வேண்டுமே!

''காலேஜ் திறந்து பத்துநாள் தடங்கல் இல்லாம தொடர்ந்து நடந்திருக்கே. . ஸ்ட்ரைக் இல்லாம!... அதை இப்படி கொண்டாடறா் நம்ம புரபஸர்!''



கி: அந்த மத முறைப்படி என்னென்ன சடங்குகள் செய்ய வேண்டுமோ அதைச் செய்துகொள்ளத்தானே வேண்டும்?

வை: உன்னை ''யாரோ'' தூண்டி விட்டிருக்கிறார்கள், நீ உன்னுடன் இருப்பவர்களைத் தவறான பாதைக்கு அழைத்துச்செல்கிறாய்.

கி: நான் சரியான பாதைக்குத்தான் அழைத்துச் செல்கிறேன்.

வை: சரி; நீ ஒரு முடிவுக்கு வந்துவிட்டாய், உன்னுடன் பேசிப் பயன் இல்லை. ஆனால் இனிமேல் நீ பத்திரிகையாளர்களிடம் பேசும்போது ''ஒரேயடியாக ஜாதி இந்துக்களின் கொடுமையால்தான் மதம் மாறுகிறோம்'' என்று கூற வேண்டாம். அரசாங்கத்திடம் உங்களுக்குஉள்ள வெறுப்பையும் சேர்த்துக் கூறு!

கி: நாங்கள் இரண்டையும் சேர்த்துத்தான் கூறுவோம்.

இதற்குப் பிறகு உரையாடல் தொடரவில்லை. கிருஷ்ணமூர்த்தி தமக்கு வேலை இருப்பதாகக் கூறிச் செல்கிறார். வைத்தியலிங்கத்துக்கும் அனந்தகிருஷ்ணனுக்கும் நன்றி கூறி பாண்டிச்சேரிக்குச் செல்ல பஸ் நிலையத்துக்குச் செல்கிறோம். எதிரே அரசாங்க ஜீப்புகள் வருகின்றன. ஹரிஜனங்கள் மதம் மாறுகிறோம் என்ற முடிவுக்கு வந்தவுடன் அரசு அதிகாரிகள் அந்தக் கிராமத்துக்கு வர ஆரம்பித்திருக்கிறார்கள்.

புதுவை உள்துறை அமைச்சர் காரை அனுப்பி கிருஷ்ணமூர்த்தியைக் கூப்பிட்டு விசாரித்திருக்கிறார். ஹரிஜனங்களுக்குத் தென்னங் கன்றுகளும், விதைகளும் தாராளமாக விநியோகிக்கப்பட்டு வருகின்றன.

பாண்டிச்சேரியில் உள்ள முஸ்லிம் மத குருவான ஹாஜி அப்துல் சலாமைச் சந்திக்கிறோம்.

'திம்மநாயக்கன் பாளையம்..' என்று ஆரம்பிக்கு முன்பே அவர் குறுக்கிடுகிறார். ''இது பற்றி என்னிடம் எதுவும் கேட்க வேண்டாம். வறுமையையும், சோதனைகளையும் தாங்கிக் கொள்ள எவனுக்குத் தைரியம் இருக்கிறதோ அவன் முஸ்லிம் மதத்துக்கு வரலாம். திம்மநாயக்கன் பாளையம் மக்கள் யாரும் என்னை அணுகவில்லை. அப்படியே வந்தாலும் அவர்கள் கோர்ட்டுக்குப் போய் மதம் மாறப் போவதைத் தெரிவித்துவிட்டு என்னிடம் வரட்டும். பிறகு அது பற்றி யோசிக்கலாம்.''

'''சுன்னத்' செய்து கொண்டால்தான் முஸ்லிமாக மாறமுடியும் என்பது சரியல்ல. 'சுன்னத்' செய்யாமல்கூட முஸ்லிமாக மாறலாம். என்ற ஹாஜி அப்துல் சலாம், இறுதியில் சொன்ன பொன்மொழி:''சமத்துவம் சகோதரத்துவம் என்பது எல்லா மதக் கோட்பாடுகளிலும் இருக்கிறது. ஆனால் அதை அமல் படுத்துவதில் தனிப்பட்ட நபர்களின் விருப்பு வெறுப்புக்கள் அதிகமாக இருப்பதால்தான் ஏற்றத் தாழ்வுகள் பளிச்சென்று தெரிகின்றன.''

கட்டுரை : ப்ரியன்
படங்கள் : ஜெய்மோகன்


இப்போதைக்கு இவங்களோட உக்காருங்க..
அப்புறம் பாத்துக்கலாம்!


வாய் கிட்ட தான் வால்!
வால் கிட்ட தான் கழுத்து!
கழுத்து மேலே தான் நாய்!
எதிர்க் கட்சிகளின் ஒற்றுமை முயற்சி!


ஐயோ, பாவம் கல்லடி!
மத்திய ஆட்சி
!?
இதோ பாரு பூமாரி!
மத்திய ஆட்சி

# பொருளாதாரப் பொட்டலம்!

திரு ஆர்.வி. இன்றுமுதல் நடந்துதான் காரியாலயம் செல்வார் என்றும் சைக்கிளில்தான் நாடாளுமன்றம் போவார் என்றும் எதிர்பார்க்கிறோம்!

ஏனெனில் பெட்ரோல், டீசல், கெரசின், காஸ் ஆகியவற்றின் விலைகளை அரசு உயர்த்தியிருப்பதால் இவற்றைப் பயன்படுத்தும் அளவு குறையும், அந்நியச் செலாவணி மிச்சமாகும், தேசப்பொருளாதாரம் பலப்படும் என்று அவரே சொல்லி இருக்கிறார்.

பிரதமர் இந்திரா காந்தியின் இல்லத்தில் இனி சமையலுக்கு காஸ், கெரஸின் ஆகிய எரிபொருள்களைப்பயன் படுத்தவே மாட்டார்கள்; மேனகாவும், ஸோனியாவும் கண்களைக் கரித்தாலும் நயனங்கள் சிவந்தாலும் பாதகமில்லை என்று இனி விறகும் கரியும்தான் உபயோகிப்பார்கள் என்று நம்புகிறோம். விறகு, கரியின் விலையும் மிக அதிகமாகவே இருப்பதால் பிரதமர் வீட்டில் இனி ஒருவேளை மட்டுமே அடுப்பெரிந்தாலும் அதிசயப் படுவதற்கில்லை! இந்நாட்டிலுள்ள கோடானுகோடி சராசரிகளுக்குத்தான் சமாளிக்கத் தெரியவில்லை! அசடுகள், தவிக்கிறார்கள்!

பொருளாதாரப் பொட்டலம் (Economic package) தயாராகிறது: குடியரசுத் தலைவர் கையொப்பம் பெற ஆர். வி. விமானமேறி ஹைதராபாத்துக்குப் பறக்கப் போகிறார் என்றெல்லாம் கேள்விப்பட்டதும் ஏதோ அற்புதம் நிகழப் போவதாக எதிர்பார்த்தோம். கடைசியில் யானை குட்டி போடக் காத்திருந்த கதையாகியது!

சந்தேகமே இல்லை, பெட்ரோலியம் பொருள்களின் விலை உயர்வால் மற்ற மற்ற பொருள்களின் விலைகளும் சங்கிலித் தொடர்போல உயர, மக்கள் மேலும் அவதிக்குள்ளாகத்தான் போகிறார்கள்.

இன்னொரு பொருளாதாரப் பொட்டலம், பாங்குகள், தொழிலகங்களுக்குத் தரக் கூடிய கடன்களுக்கு மேலும் புதிய முட்டுக்கட்டைகளைப் போடுகிறது; உயர் வருமான முள்ளவர்கள் அரசிடம் தந்து கட்டாயமாகச் சேமிப்புச் செய்யவேண்டிய தொகையை அதிகரிக்கிறது: பாங்குகள், டெபாஸிட்டுகளைத் திருப்பித் தரும்போது செக் மூலம்தான் தரவேண்டும் என்கிறது.

இதனாலெல்லாம் தேசத்தின் சராசரிகள் எந்த விதமான பயனும் பெறப் போவதில்லை. மாறாக, தொழில்வளம் குன்றி வேலையில்லாத்திண்டாட்டம் தான் அதிகரிக்கும். அளவுக்கு மீறிய பொருளாதாரக் கட்டுப்பாடுகள் எல்லாம் பணம் படைத்தவர்கள் தில்லுமுல்லு பண்ண ஊக்கமளிப்பதாகவே முடியும். தேசப் பொருளாதாரம் பலவீனமடைய அடைய, கறுப்புப்பணப் பொருளாதாரம் பலப்பட்டுக் கொண்டே போகும்

தும்பை விட்டு விட்டு வாலைப் பிடிக்கிறார்கள். பொருளாதாரம் பலப்பட வேண்டுமானால் வரிகளைக் குறைத்தல், தொழில் வளப் பெருக்கத்துக்கு உள்ள கட்டுப்பாடுகளை நீக்கல், டம்பாச்சாரி திட்டங்களையும் அரசின் ஊதாரிச் செலவினங்களையும் குறைத்தல், உபரி பட்ஜெட் தயாரித்தல் போன்றவைதாம் உதவும்.

கடுகு, உப்பு, மிளகு என்று வாங்கினால் பொட்டலக் காகிதத்தில் சில சுவையான செய்திகளாவது அகப்படுகிறது குமுதத்துக்கு. ஆர். வியின் பொருளாதாரப் பொட்டலத்தில் அது கூட இல்லை!

1981 ஜூலை 26

துன்மதி ஆடி 11

மலர் : 39 இதழ் : 52



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



# செய்திகள் வாசிப்பது, செம்பியன்

பகாடியா ஒன்றுக்கும் பிரயோஜனமற்ற வர் என்பதாகத் தீர்மானித்து ராஜஸ்தான் முதல்வர் பதவியிலிருந்து அவருக்குக் கல்தா கொடுத்து அனுப்பி விட்டார்கள்.

ஏதோ மற்ற மாநில இ. காங்கிரஸ் முதலமைச்சர்கள் எல்லாம் செயல் திறனில் சூராதி சூரர்கள், இவர் ஒருவர்தான் அடிமுட்டாள் என்பது போலல்லவா காரியம் நடக்கிறது என்று அஞ்சய்யாவும் குண்டுராவும் கோபித்துக் கொண்டால் நியாயம் இருக்கிறது! பாவம், அஞ்சய்யா வகுப்புக் கலவரங்களை அடக்க அரும்பாடுபடுகிறார், முடியவில்லை! சமீபத்திய செய்திப்படி பதினாறு பேர் மரணம் பல நூறு பேருக்குக் காயம். குண்டுராவ் ஆட்சி பற்றியோ கேட்கவே வேண்டாம். ஜகத்பிரசித்தம். 'பகாடியாவுக்கு நாங்கள் எந்த விதத்தில் குறைந்து போய்விட்டோம்?' என்று இவர்கள் கேட்கலாம்தானே?

போகிற போக்கில் பகாடியா திடீர் ஞான ஒளி பெற்றுப் பேசினார்: ''செயல் திறனாவது ஒன்றாவது? அம்மா மனம் வைத்தால் முதல்வராய் நீடிப்பேன், இல்லையேல் இல்லை; அவ்வளவுதான்!'' என்றார்.

இப்போது மாத்தூர் வந்திருக்கிறார் புதிய முதல்வராக. மறுபடி மேலிட நியமனமே. இவர் வாழ்வு எத்தனை நாளோ?

நினைத்தால் ஒருவரைப் பதவியில் அமர்த்துவது, நினைத்தால் உருட்டித் தள்ளுவது என்றிருந்தால் எந்த மாநிலத்தில் யாருக்குத்தான் நிச்சயத்தன்மையுடன் உருப்படியாக எதையும் செய்யத் தோன்றும்?

மக்களிடம் செல்வாக்குள்ள வல்லவனை, திறமைசாலியைவாக்குப்பதிவு செய்து கட்சித் தலைவனாகவும் ஆட்சித் தலைவனாகவும் தேர்ந்தெடுங்கள். அப்புறம் வாலைச் சுருட்டிக் கொண்டு மக்களுக்குக் கடமையாற்றுங்கள் என்று இந்திரா.... சொல்ல மாட்டார்!

சொல்லிவிட்டால் ஜனநாயகப் போர்வையில் ஒரு தலைசிறந்த சர்வாதிகாரி என்ற அவரது 'இமேஜ்' பாதிக்கப்பட்டு விடாதா!

'ஒரு வேளைச் சாப்பாட்டைத் தியாகம் செய்தாலும் செய்யலாமே ஒழிய அமெரிக்கக் கோதுமையை ஏற்க மாட்டோம்; பகிஷ்கரிப்போம்' என்கிறார் வாஜ்பாய்.

எதிர்க் கட்சியில் இருந்து கொண்டு இப்படிப் பேசலாம். ஆட்சியில் உள்ளோர் உணவுப் பொருள் விலை ஏறாமலும் பற்றாக்குறை இல்லாமலும் கவனித்துக் கொள்ள வேண்டியது அவசியம்.

ஆயினும் ஒரு கேள்வி எழுகிறது. விளைச்சல் பாதிக்கப்படவில்லை என்று ஒரு புறம் கூறிக் கொண்டே இன்னொரு புறம் இறக்குமதி செய்வானேன்? அரசின் அறிக்கைகள் பொய்யல்ல எனில் உணவு தானியக் கொள்முதலில் அரசின் திறமையின்மை தெளிவாகிறது.

எப்படிப் பார்த்தாலும் வெட்கக்கேடு!

● ● ●

சாபிராணி கொலைவழக்கில் தீர்ப்பு வெளியாகியிருக்கிறது. ஒரு பத்திரிகை நிருபரின் மனைவியை வழிமறித்துப் பலர் அவளை மாறி மாறிக் கற்பழித்து, கடைசியில் கொலையும் செய்த குற்றத்துக்காகப் பதினொருபேர் தண்டனை பெறுகிறார்கள். இவர்களில் எட்டுப் பேருக்கு ஆயுள் தண்டனை. இந்த எட்டுப் பேரில் இருவர் ஒரிஸ்ஸா இ. காங்கிரஸ் பிரமுகர்கள்! மற்றவர்கள் அவர்களின் அடியாட்கள்!

சாபிராணி ஏன் கற்பழிக்கப்பட்டு, கொலையும் செய்யப்பட்டாள்? அவள் மோகபத்ராவின் மனைவியாயிற்றே அதனால்தான். பத்திரிகை நிருபர் மோகபத்ரா, இந்த இ. காங்கிரஸ் பிரமுகர்களின் அக்கிரமங்களை அம்பலப்படுத்தலாமா? பெருங்குற்றமல்லவா? அதனால் அவர் மனைவியைப் பழிவாங்கிவிட்டார்கள், மாவீரர்கள்!

மகாராஷ்டிராவில் அண்டுலே இ. காங்கிரஸ் ஆட்சியின் சாதனைகளை விளக்க நாளிதழ் நடத்தி முடித்து விட்டார்; இப்போது ஹரிகதா காலட்சேபங்கள் நடக்க ஏற்பாடுகள் செய்து வருகிறார்! முதல் காலட்சேபம், மோகபத்ரா என்ற அசுரனுக்கு இ. காங்கிரஸ் தெய்வங்கள் நல்ல பாடம் கற்பித்ததைப் பற்றியதாக இருக்கலாம்!

● ● ●

சென்னை எழும்பூர்ப் பகுதியில் இரட்டைக் கொலை நடந்திருக்கிறது. பொதுவாகவே தமிழகத் தலைநகரில் குற்றங்கள் நாளுக்கு நாள் மலிந்து வருகின்றன. போலீஸாரின் ஆற்றல் குறித்து மக்களுக்கு நம்பிக்கை படிப்படியாகக் குறைந்து வருகிறது. இதுபற்றி கமிஷனரைப் பேட்டி காணலாம் என்றால் 'அரசு அனுமதியை நான் பெற வேண்டும்; பிறகுதான் பத்திரிகைக்குப்பேட்டி' என்கிறார். கல்கி பத்திரிகையின் கடிதத்தைச் சம்பந்தப்பட்ட அமைச்சகத்துக்கு அனுப்பியுள்ளாராம். அரசு செயல்படும் வேகத்தில் அந்தக் கடிதத்தைப் பார்த்து, உண்டு இல்லை என்று அமைச்சர் கூறுவதற்குள் இந்திராவின் பேரன் ஆட்சி வந்துவிடும் போலிருக்கிறது!

போலீஸ் பாதுகாப்பு போன்ற பிரச்னைகளில் மக்களுக்கு உடனுக்குடன் தகவல் பெறுகிற அடிப்படை உரிமை இம்மாதிரியாக மறுக்கப்படுகிறது.

இதற்கு மக்கள் ஆட்சி என்று நாமகரணம் வேறு!

• • •

• வரும் வழியிலேயே தகராறு ஆகி, தங்கி, தாமதித்து, ரிப்பேர் பார்த்துக்கொண்டு ஒரு வழியாக வந்து சேர்ந்த ஒவ்வொரு புதிய ஜகுவார் போர் விமானத்தையும் இந்தியா 14 கோடி ரூபாய் கொட்டிக் கொடுத்து வாங்குகிறது! அப்புறம் அதற்கு எரிபொருள் செலவு, கட்டிக் காக்கும் செலவு எல்லாம் தனி! கட்டிவருமா ஏழை இந்தியனுக்கு?

கூட்டுச்சேராக் கொள்கை நமக்கு விதிக்கும் அபராதம் இது! பாதுகாப்புச் செலவுகளுக்கு அணை போட்டு, தொழில் வளப் பெருக்கம் பக்கமாகத் திருப்பி விட்டுத் தனியார் துறையையும் தட்டிக் கொடுத்தால் நமது பொருளாதாரம் கிண்டி ரேஸ் குதிரை வேகத்தில் முன்னேறுதா? ஜப்பானும் மேற்கு ஜெர்மனியும் அப்படித்தானே உயர்ந்தன? அவர்கள் கடைப்பிடித்தது கூட்டுச் சேராக் கொள்கை அல்ல; செய்துகொண்டது பாதுகாப்பு உடன்படிக்கை.

---

# சவால்

• எடுத்தவுடனே ரெண்டு பிரதர்ஸ் பிரிஞ்சுடறுங் கப்பா. உடனேயே கத நமக்குப் புரிஞ்சு போவுது. தம்மாத்தூண்டு மெல்லிசான கதைக் கயித்தில படம் இலே உலாம தொங்கறதுக்குக் காரணம் கமலும் ஹிந்தியும்தான்.

இந்தத் தபா கமலும் ஜெய்யும். கமல் நம்ப பாஷையைக் கீச்சிட்டாரு. நைலா பாக்கெட் அடிக்கறதும், ஹாய்ய்ங்குன்னு நீட்டிக் கத்தற ஸ்டைலும் டேன்ஸ் கணக்கான சண்டையும்....

அத்தவுடு! இந்த பர்மா பாப்பா மனோரமாவை என்னங்கிற நீ? ரவுடி கணக்கான நடையும், நம்பர் கேட்டு உதையும், பிக்-பாக்கெட் ஸ்கூலும் படா உதார் நைனு.

அத்தயும் வுடு! இந்த ஸ்ரீப்ரியா என்னப்பா ஜெயமாலினியா மாறிட்டாரு. இந்த புருஸ்லி யுகத்ல அவர் பாஞ்சி போடறஸ்டண்ட்டகாதில பூ வைக்காம நம்ப-லாம்னு பார்த்துக்கோயேன்.

ஜெய் எதுனுச்சும் படா வேலே காட்டுவார்னு ஆன்னு பாத்தா வாய்ல ஈ பூந்ததுதான் மிச்சம். ஏமாத்திட்டயே வாத்யாரே. இது நாயமா?

அத்த வுடு! இந்த லட்சுமி ரெண்டு சீன்லே வந்தாலும் லட்சுமிகரம்பா!

| | | |
|---|---|---|
| நடிப்புக்கு | ரூ. | 0–40 |
| கேமராவுக்கு | ரூ. | 0–40 |
| டைரக்ஷனுக்கு | ரூ. | 0–30 |
| இசைக்கு (எம்.எஸ்.வி.) | ரூ. | 0–25 |
| ஸ்டண்ட் மாஸ்டருக்கு | ரூ. | 0–40 |
| காஸ்ட்யூம் டிசைனருக்கு (வாணி கணபதி) | ரூ. | 0–15 |
| ஆக மொத்தம் | ரூ. | 1–90 |
| கொடுப்பது | ரூ. | 2–90 |
| கிடைப்பது | ரூ. | 1–90 |
| தண்டம் | ரூ. | 1–00 |





புருசன் பத்தித் தெரிஞ்சதும் படபடக்கிற இடம் ஒன்னு போதுமே!

ஆமா இந்த விஜயகுமார் ஆரம்பத்ல அம்ஜத்கணக்கா சிரிக்கிறார். பொறவு அது கைவரலேன்னு புரிஞ்சுக்கினு அவுரே வுட்டுட்டார். தப்பிச்சோம்.

அப்பால அனகா பயாஸ்கோப்பு பண்ணிருக்கிற பிரசாத்துக்கு ஒரு பாராட்டு உடனும்பா.

இன்னு சொல்லு. படம் ரொம்பப் பிரமாதமா இஸ்லோங்காட்டியும் நல்ல கரம் மசாலா. இலே நெறய கைதட்டல் வாங்குறதாலே சொல்றேன். பில்லா கணக்ல பிச்சிக்கிட்டா மூக்ல வெரல் வக்கக் கூடாது, ஆமா!

– நளினி சாஸ்திரி

# தருகிறோம்...



நா. மகாலிங்கம்



சென்னை உர ஆலை... வெளிப்புறத் தோற்றம்

பொள்ளாச்சி திரு நா. மகாலிங்கம் பங்களூர் சென்று இளைத்துத் திரும்பியிருக்கிறார். டாக்டர்கள் உங்கள் வயதுக்கு எடை சற்று அதிகம்தான் என்றார்களாம். உடனே பங்களூரில் உள்ள இன்ஸ்டிடியூட் ஆஃப் நாட்சுரோபதியில் சேர்ந்தார். அங்கே யோகாசனப் பயிற்சியும் உண்டு. முதல் இரண்டு நாட்களுக்குத் தேனும் எலுமிச்சம் பழச் சாறும் தான் தந்தார்களாம்! பிறகுதான் இரண்டு சுக்கா சப்பாத்திகளைக் கண்ணிலே காட்டினார்கள்!

என். எம். அவர்கள் உடல் இளைத்தாலும் சக்தி சர்க்கரை ஆலையில் இந்த ஆண்டு லாபம் கொழுத்தது! அதையும் இளைக்கச் செய்தார் மகாலிங்கம்! கரும்பு விவசாயிகளுக்கு அரசு நிர்ணயித்த விலைக்கு அதிகமாகவே தந்தார். பல கிராமப்புற அபிவிருத்தித் திட்டங்களுக்கு நிதி ஒதுக்கினார். சக்தி இன்ஸ்டிடியூட் ஆஃப் டெக்னலஜி, 50 படுக்கைகள் கொண்ட ஒரு மருத்துவ மனை, கால் நடை மருத்துவமனை ஒன்று முதலிய வற்றுக்குத் திட்டம் போட்டாகி விட்டது. செல்வந்தர்கள் பின்பற்ற வேண்டிய ''தர்ம கர்த்தா முறை'' என்று காந்திஜி குறிப்பிட்டது இதைத்தானே!

— சாருகேசி, தமயந்தி

அமெரிக்கத் தொழில் நுணுக்கமும் நிர்வாகத் திறனும் இணைந்து அமைந்தது மணலியில் உள்ள சென்னை உரத் தொழிற்சாலை. இதில் அமெரிக்க நிறுவனமும் இந்திய சர்க்காரும் தேசிய ஈரானிய பெட்ரோலியம் நிறுவனமும் பங்குதாரர்கள். 1200 பேர் பணியாற்றியும் விபத்துக்கள் ரொம்ப ரொம்பக் குறைவு. இதற்காக எட்டு அமெரிக்க விருதுகளையும் ஏழு அகில இந்திய விருதுகளையும், பதினெட்டுத் தமிழக விருதுகளையும் பெற்றது!

நாள்தோறும் 750 மெட்ரிக் டன் அமோனியா, 885 மெட்ரிக் டன் யூரியா, 1800 மெட்ரிக் டன் என்.பி.கே. உரங்கள் தயாராகிறது என்றாலும் கிடங்கில் ஒரு மூட்டை கூடத் தங்குவதில்லை. 80–81ம் ஆண்டில் லாபம் பதினெட்டே கால் கோடி! 'டிவிடெண்டி'ல் சரி பாதிப் பங்கு இந்திய அரசுக்கு. ''பேபி ரெஸிடெண்ட் ஆஃப் இந்தியா'' என்று காசோலையாக அனுப்பப்படுகிறது.

'விஜய்' உரங்கள் தயாரிப்புடன் நிற்காமல், விவசாயிகளுடன் நேரடித் தொடர்பு கொண்டு பல விதங்களிலும் உதவ ஃபீல்ட்

சென்னை உர ஆலை 'கண்ட்ரோல்' அறை



# தகவல்

ஆபீசர் பட்டாளம் நிறுவியிருப்பது நிர்வாக ஆற்றலுக்கு ஒரு சான்று. தொழிலாளருக்கு எவ்வித வசதிக்கும் குறைவில்லை.

பங்குதாரராய் நீடித்தாலும் அமெரிக்க நிர்வாகம் விடைபெற்று இந்தியரிடம் முழுப் பொறுப்பையும் விட்டிருக்கிறது. இந்தப் பொதுத் துறை நிறுவனம் மற்ற பல அரசுத் துறை நிறுவனங்களைப் போல் ஆகிவிடாமல், தன் தனித் தன்மையையும் செயல் திறனையும் காத்துக் கொள்ளட்டும். - பீ.எஸ்.எம்.



கார்த்திகேயன்

உலக ஆணழகன் போட்டியில் 1952ம் வருடம் முதல் பரிசு பெற்றவர் மனோகர் எய்ச். சென்னையில் நடந்த இவரது உடலழகு கண்காட்சியில் (ஆம்! இவரது உடலே ஒரு கண்காட்சிதான்!) பல விநோதங்களைச் செய்து திகைக்க வைத்தார். நானூறு பக்க புத்தகம் ஒன்றை நாலே விநாடியில் கிழித்தார். ஒற்றைக் கை மட்டுமே ஊன்றிப் படுத்துக்கொண்டு உடம்பை உயர்த்தித் தாங்கினார். அந்த நிலையிலேயே ஐம்பது கிலோ எடையுள்ள ஒரு பையனையும் சேர்த்துத் தூக்கிக் காண்பித்தார். சில பாடல்களை ஒலிக்கச் செய்து அந்தப் பாடல்களின் தாளத்துக்கேற்ப கை, கால், தொடை, மார்பு ஆகிய இடங்களில் உள்ள முறுக்கேறிய தசைகளை ஆடவைத்தார்! மனோகர் எய்ச்சின் வயது என்ன தெரியுமா? எழுபது!

• • •

தலைமைச் செயலகத்தின் தலைமைச் செயலாளர் கார்த்திகேயன் வேலையிருந்து விட்டால் சாப்பாட்டைப் பற்றிக் கவலைப்பட மாட்டாராம். இடைவேளையின்போது தலைமைச் செயலகத்தில் வேலையிருந்து விட்டால் கீழே சென்று மில்க் பூத்திலிருந்து குளிர்ந்த பாலைக் கொண்டுவரச் சொல்வாராம். ஒரு டம்ளர் பால் சாப்பிட்டுவிட்டு வேலைகளைத் தொடர்வாராம்! —சலன்

மனோகர் படம்: உத்ரா



எஸ். வி. சேகர்

எஸ். வி. சேகரின் நாடகப்பிரியா குழுவின் நாடகங்கள் பல வெற்றி பெற்றாலும் 'தனுக்குத் தோரணம்' என விமர்சித்தவர் உண்டு. இந்தக் குழுவின் அடுத்த நாடகம் ''காதுல பூ அல்லது மரோ சாவித்திரி!'' இது ஒரு சமூக — புராண — நகைச்சுவை நாடகமாம்! ஜி. கே. எழுதிய கதையில் கதாபாத்திரங்கள் யார் யார் தெரியுமா? சிவன்: மனிதன்; நாரதர்; மார்க்கண்டேயன் 10ம் வகுப்பு; சாவித்திரி பியூசி; கண்ணப்பன் பி.எஸ்ஸி, அனுசூயா எஸ். எஸ். எல்.ஸி.!

''என்ன பெயர் ரொம்பப் புதுமையாய் இருக்கிறதே?'' என்றால், எஸ். வி. சேகரின் பதில்: ''முதலில் நாடகத்துக்கு 'காதுல பூ' என்றுதான் தலைப்பு வைத்திருந்தோம். பலர் ''அதான் வழக்கமா வைக்கிறீங்களே!'' என்று சொன்னதால் ''மரோ சாவித்திரி'' என்றும் வைத்துவிட்டோம்!''

—எஸ். சந்திரமௌலி

மனோகர் எய்ச்



Extraordinary events threw into terror all inhabitants of this province —Betrand

## 17

கண்ணை விழித்தபோது சுவர்ணமுகியின் முன் நின்றது ஏனாதி குலப் பெண் ஒருத்தி. இருட்டுக்குக் காலும் கையும் முளைத்தது போல் கறுப்பாகத் தெரிந்தாள். சுவர்ணமுகியை விசேஷமாகப் பார்த்தாள்.

அப்போது 'அஹ்ஹஹ்ஹோய்' என்று தோதாவின் ஆட்கள் சுவர்ணமுகியைத் தேடி காட்டைக் கோதிக் கொண்டு வந்தார்கள்.

அந்தச் சத்தத்தைக் கேட்டதும் சுவர்ணமுகி பயந்து அந்தப் பெண்மணியிடம் அபிநயம் காட்ட,

அவளும் அவளது காட்டுப் பாஷையில் விரைவாகப் பேசி, சுவர்ணமுகியை எழுப்பி அழைத்து ஒருபுதர் வளைவு வழியாக இழுத்துக் காட்டின் கர்ப்பத்துக்குள் போனாள்.

அரண்யம் என்பது எப்படி இருக்கும் என்று அன்றுதான் சுவர்ணமுகிக்குத் தெரிந்தது.

கோங்கு, தோது, தேக்கு, மருது, குங்கிலியம், நாவல், ஆச்சா, வாகை, புன்னை, மந்தாரம், அசோகம் ஆகிய வகை மரங்கள் கூட்டமாக நெருங்கி வளர்ந்திருக்க,

அதைச் சுற்றிப் புஷ்பச் செடிகளும், கொத்தான்களும், எண்ணற்ற பசுமை வகைகளும் அடர்வாகப் படர்ந்திருக்க,

சூரியன் ஊசிச் சிதறல் கூட இழை விழவில்லை. கனந்தகாரமாக இருந்தது. இருட்டு நிரந்தரமாக வாசம் செய்ததால் இரவுப் பூச்சிகள் சதா சிணுசிணுத்துக் கொண்டிருக்க,

எங்கும் சமயத்தில் ஒரு சோகப் புலம்பல் போலவும், சமயத்தில் தண்டைச் சிலம்பு போலவும் ஒலிகள் தோன்றிக் கொண்டே இருந்தது.

ஏனாதியை நம்பிக்கையோடு பின்பற்ற, அவளும் அந்த அரண்யத்தைத் தலைகீழாக அறிந்தவள், கிட்டத்தட்ட கண்ணை மூடிக் கொண்டு நடப்பவள் போல் நடந்துபோனாள்.



ஒரு இடத்தில் ஒரு தழைப் புதரை விலக்கிச்சென்றாள். மற்றொரு இடத்தில் ஒரு மரக்கிளையைத் தாண்டிச் சென்றாள்.

சில இடங்களில் இருட்டு வெகு இறுக்கமாக, தனது கையையே சுவர்ணமுகியால் பார்த்துக் கொள்ள முடியவில்லை.

தண்ணென்று ஒரு பனிக் குளிர்ச்சி. தரை அநேக இடங்களில் மெத்து மெத்தென்று புழுதி வகையாக இருந்தது.

அந்தகாரத்தின் நடுவே: தூரத்தில் பார்த்தால் மர




இடைவெளிகளில் தெரிந்த சின்னச் சின்ன வெளிச்ச ஓட்டைகள் அவள் கண்களுக்குப் புலனாகி வந்தன.

ஏனாதி எதைப் பற்றியும் அஞ்சவில்லை. ராஜ பாட்டையில் போவது போல் அனாயாசமாக நடந்தாள்.

சீக்கிரத்தில் ஒரு கிலுகிலு ஒலி மெள்ள உதித்துப் போகப் போக அவர்களை நோக்கி எதிர் வந்தது.

மர அடர்வுகள் சற்றுக் குறைந்து வந்து ஒரு இடத்தில் திடீரென்று வெட்ட வெளியாகி விட்டது. திடீரென்று ஒரு பரந்த காட்சி அவள் கண் முன் விரிந்தது.

புது உலகம் பார்ப்பது போல் எங்கும் குடிசைகளும், குடியிருப்புக்களும் தெரிய, அந்த ஏனாதி இனத்தவர்கள் கூடி சுறுசுறுப்பான பணிகளில் ஈடுபட்டிருப்பது தெரிந்தது.

இங்கும் அங்கும் பாறைகள் பூத உருவங்கள் போல் படுத்திருக்க, ஒரு பகுதிப் பாறைகள் மட்டும் சின்ன இயற்கை அரண் போல் சற்று உயரமாகக் குண்டும் திண்டுமாக வளர்ந்திருந்தன.

அவற்றில் ஒன்றிலிருந்து ஜரிகையிழை அருவி கீழே மூப்ப

# தாமதம் தொடரட்டும்!



டி. வி. சங்கரநாராயணன் வழக்கறிஞர் தொழிலை விட்டது அந்தத் துறைக்கு லாபமோ நஷ்டமோ தெரியாது ஆனால் நிச்சயம் கர்நாடக இசை உலகுக்குக் கொள்ளை லாபம்தான்!

அகாதமியில் சென்ற டிசம்பரில் அவர் மத்தியானக் கச்சேரியிலிருந்து இரவுக் கச்சேரிக்கு உயர்ந்திருக்கிறார். ஆனால் நமக்கோ காலை, மாலை, இரவு எந்நேரமும் அவர் பாடக் கேட்டுக் கொண்டே இருக்கலாம் போல் தோன்றுகிறது!

சங்கீதத்துக்கு நல்ல தொண்டாற்றி வரும் கிருஷ்ண கான சபையில் அண்மையில் அவர் கச்சேரி தொடங்கிய சில நிமிஷங்களுக்குள்ளாகவே, அன்று காலைதான் அறிவிக்கப்பட்டிருந்த டீசல், கெரசின், காஸ் விலை உயர்வுகள் பற்றிய ' கசப்பான நினைவுகள் எல்லாம் பறந்தோடிவிட்டன; கந்தர்வ கான உலகுக்குச் சென்று விட்டோம்!

வளமான குரல் வரப்பிரசாதம்; அகரப் பயிற்சியும் புரிகிறது. ஜெட் வேகத்தில் மேலே மேலே இன்னும் மேலே அதற்கும் மேலே போய்ச் சஞ்சரிக்கும்போதுகூட என்ன சுருதி சுத்தம்!

'' 'ஒளியின் நாவை இருப்பிடம் கொண்டாள்' என்று பாரதி தவறுதலாகப்பாடிவிட்டார்; (மதுரை) மணியின் நாவைஇருப்பிடம்கொண்டாள்' என்று பாடியிருக்க வேண்டும்''. என்று 'வெள்ளைத் தாமரை' பாடக் கேட்டுச் சிலாகித்தவர் முசிரி. அந்த மணியின் மருமான், சிஷ்யர் தமக்கென ஒரு தனிப் பாதையும் வகுத்துக் கொண்டு ஜமாய்க்கிறார்.

சுஜாதாவின் 'லேட்டஸ்ட்' படிப்பது போல் ஒரு ஜிலு ஜிலுப்பு, சிலிர்ப்பு, பிரமிப்பு எல்லாம் ஒரே சமயத்தில் தாக்க, ராகத்துக்கு ராகம், பாட்டுக்குப் பாட்டு கர கோஷம்.

லால்குடி கோபாலய்யரின் மூன்றுபாடல்கள் இடம்பெற்றன. அவற்றுள் மோகனகல் யாணியில் 'தாமதம் தகாதய்யாமுருகையா'வைக் கேட்டபோது தாமதத்துக்காக முருகனை மன்னித்துவிடலாம் என்றே தோன்றியது. அவன் தாமதிப்பதால்தானே இந்த மோகன கல்யாண இசையைக் கேட்டு ரசிக்க முடிகிறது!

மற்றொரு ஹைலைட் காபி ராகம் தானம் பல்லவி. ஒரே கமகமதான்! கணக்கு வழக்குகள் —கம்ப்யூட்டர் கச்சிதம்.

பக்தி உணர்வு, உருக்கம்? வரும் நாளா வட்டத்தில், அவசரமென்ன?

லால்குடி ஜெயராமன் வயலின் பாடகருக்கு அபரிமிதமான உற்சாகம் ஊட்டியது. ஒலிக்கு எதிரொலியாக வாசித்தார் லால்குடி. தனித்து இயங்கிய சந்தர்ப்பங்களில் அவர் வில் வானவில்லாகியது. வேலூர் ராமபத்திரன் திறமை கச்சேரியைப் போஷித்த டானிக்.

இந்த இதழில் ஒரு நல்ல கச்சேரிக்கு இலக்கணம் வகுத்துள்ளார் பம்பாய் டி. வி. ராமானுஜம். இலக்கியமாகத் திகழ்ந்தது. டி. வி. எஸ்ஸின் அன்றையக் கச்சேரி.

- குட்டி கிருஷ்ணன்

---

தடி விழுந்து பாறைகள் வழியே ஸ்படிக நிறத்திரவம் போல் வடிந்து ஓடியது.

ஏனாதிப் பெண்மணி அந்தச் சிவப்பு நிறப் பெண்ணை அழைத்துப் போக,

அதைத் தூரத்திலிருந்தே பார்த்த அத்தனை ஏனாதிகளும் புள்ளிகளாக அங்கங்கே ஸ்தம்பித்து நின்றனர்.

ஏனாதிகளுக்குப் பொதுத் தலைவர் என்று யாரும் கிடையாது.

ஒரே குடும்பத்தினர் ஒரேசமூகமாக வசிப்பார்கள்.

அந்தச் சமூகத் தலைவனிடம் சுவர்ணமுகியைக் கொண்டு போக,

அந்த வயதான தலைவர் அவளிடம் ஒரு விதத் தெலுங்கும் தமிழும் கலந்த பாஷையில் ஆதுரமாக வினவினார்.

ஒரு உயர்குலப் பெண் விரோதிகளால் விரட்டப்பட்டு வந்திருக்கிறாள் என்பதை அறிந்து,

அவளை வெகுவாக உபசரித்து, நல்ல வார்த்தைகள் சொல்லி, இனிய இரக்க மொழிகளால் அவளை இதமாக்கி, தனிக் குடிசை ஒன்றில் தங்க வைத்தார்கள்.

அர்ச்சனதேவனும் வீரமாலியும் லாந்தோமேயை விட்டு வெளியேறினார்கள்.

மயிலாப்பூரை அணுகியதும் அர்ச்சனன் குதிரையை இழுத்துப் பிடித்தான்.

''வீரமாலி! இப்படி வா!'' என்று சொல்லி ஒரு ஓடைச் சலசலப்பின் கரையில் நீர் பொசிந்த பசுந் தரையில் கால்களை நீட்டமாக விரவி அமர்ந்தான்.

''ட்ரேக் ராஜர் சுவர்ணமுகியை அழைத்துப் போவதென்றால் வடக்கேதான் போயிருக்க வேண்டும். எங்கே போயிருப்பான்'' என்றான் அர்ச்சனன்.

''சுவர்ணமுகிக்கு யாரேனும் உறவுக்காரர்கள் இருக்கிறார்களா?'' என்றான் வீரமாலி.

''ரங்கப்பா இருந்தார். அவர் கொல்லப்பட்டார். ஆகவே நாராயணவனம் போக மாட்டான். சந்திரகிரிக்கும் போக மாட்டான். காளஹஸ்திக்கும் போக வழியில்லை. நாகலாபுரமும் போக மாட்டான். ஒருவேளை வெங்கிடகிரிக்குப் போயிருப்பானோ?'' என்றான் அர்ச்சனன்,

வீரமாலிக்கு கவர்னரும் தெரியாது. அவனது உறவினர்களும் தெரியாது.

நாட்டில் எந்த நாயகர் கூப்பிட்டாலும் வில்லே எடுத்துச் சண்டைக்கு ஓடப்பட்டவன் அவன்.

வில் எறிவதில் அபார சாமர்த்தியம் அவனிடம் இருந்ததால் அவனைப் பொதுவாக எல்லோரும் விரும்பினார்கள்.

மயிலாப்பூர் தண்டநாயகனிடம் அவன் ஊழியம் செய்து கொண்டிருக்க,

அர்ச்சுனன் விரும்பியதால் அவனோடு புறப்பட்டு வந்தவன்.

''வெங்கடகிரியில் அவனுக்குத் தெரிந்தவர்கள் உண்டு'' என்று தொடர்ந்தான் அர்ச்சுனன்.

''அங்கே போவது இப்போது ஆபத்து ஆயிற்றே? விஜயநகர (வம்சத்து) குடும்பச் சண்டை இன்னும் முடியவில்லையே!'' என்றான் வீரமாலி.

''நீ சொல்வதும் சரிதான்! ஒருவேளை டிரேக்ராஜர் அவளை மருளிப்பட்டனத்துக்கு அழைத்துப் போயிருப்பானோ?''

''அங்கே ஏன் போக வேண்டும் சுவாமி?''

''ஒரு விஷயம் கவனித்தாயா? இப்போது யாருக்காவது அமைதியான புகலிடம் வேண்டுமென்றால் வெள்ளைக்காரனின் கோட்டைக்குத்தான் போகவேண்டி இருக்கிறது.''

''அதை நினைத்தால் வருத்தமாக இருக்கிறது சுவாமி!''

''அது நம் தலையெழுத்து! ஒருவேளை ட்ரேக்ராஜர் அவளை ஒரு பாதுகாப்புக்கு வேண்டி அந்த ஊருக்கு அழைத்துப் போயிருப்பான்.''

''அப்போது அங்கே போகலாமா?''

''அதற்கு முன் ஒரு யோசனை.''

''சொல்லுங்கள் சுவாமி!''

''ஒருவேளை இந்தத் திருட்டுப் பயல்கள் இங்கேயே அவளை வைத்திருப்பார்களோ?''

''இந்த ஸாந்தோமே வெள்ளைகளா?''

''ஆமாம். அதுமட்டுமில்லே. எனக்கு ஒரு ஆசை. எல்லா இந்திய அடிமைகளையும் நாம் இவர்களிடமிருந்து விடுவிக்க வேண்டும்.''

''முடியாது. ஸாந்தோமுக்குள் வெள்ளையர்கள் என்ன வேண்டுமானாலும் செய்யலாம். சுதந்திரம் உண்டு. இதற்கான விஜய நகரப் பட்டயம் வைத்திருக்கிறார்கள்.''

''அதனால் என்ன? இப்போது இருக்கும் நாட்டுக் குழப்பத்தில் பட்டயத்தைப் பற்றிக் கவலைப்படுவது யார்?''

> **நீங்கள் ஓவியரானால்....?**
>
> இந்த வாரம் வெளியிட்டுள்ள நான்கு சிறுகதைகளுக்கும் சித்திரம் வரைந்துள்ள ஓவியர்களிடம் சில கேள்விகள் கேட்கப்பட்டன. அந்த ஓவியர்கள் அளித்த பதில்கள் வேறு பக்கத்தில் பிரசுமாகியுள்ளன. ஒவ்வொரு கதையிலும் கேட்கப்பட்டுள்ள கேள்விக்கு நீங்கள் ஊகிக்கும் விடைகளையும் ஓவியர்கள் தரும் பதில்களையும் ஒப்பிட்டுப் பாருங்களேன்.
>
> -ஆசிரியர்
>
> விடை : பக்கம்: 53

''அதுமட்டுமில்லே. வெள்ளைக்காரர்களிடம் நல்ல வீரர்கள் உண்டு. (ஆப்பிரிக்க) கப்ரேக்கள் உண்டு. துப்பாக்கிகள் உண்டு. குண்டுகள் உண்டு. அவர்களை வெல்வது நம்மால் முடியாது.''

''முடியும் வீரமாலி!''

''எப்படி?''

''இன்று ஒபோர்த்தோ சூதாட்ட மாளிகையை அடித்து நொறுக்கினோமே அது எப்படி?''

''அது ஒரு திடீர் தாக்கு. அதுமட்டுமல்ல. தாக்கிய நாம் அங்கே நெடுநேரம் நிற்கவில்லை. நின்று, அவர்கள் படையோடு வந்திருந்தால் சமாளித்திருக்க முடியுமா?''

''முடியாது. அது எனக்குப் புரியும். நான் விரும்புவது இந்தத் திடீர்த்தாக்கு, திடீர் மறைவு, இந்த யுக்தியைத்தான்.''

''சுவாமி!'' என்று குரல் தணிந்து கூறினான். ''ஈரமற்ற பிண்டாரிகள் அல்லவா அப்படிச் செய்வார்கள்!''

சிரித்தான் அர்ச்சுனன். ''நாம் அதைத்தான் இப்போது செய்ய வேண்டும். நாட்டில் இருக்கும் குழப்பத்தில் இப்படிச் செய்வதுதான் நமக்கு ஒரே வழி. தர்ம யுத்தம் செய்யும் காலம் மலையேறி விட்டது.''

''அப்படியானால் இது ஒரு வழிப்பறி!''

''ஆமாம்! ஆனால் கள்வர் செய்வதல்ல. படையினர் செய்வது. இன்று அதன் பலனை என் கண் எதிரே ஸாந்தோமேயில் பார்த்

---

கலப்புத் திருமணங்களுக்கு அரசு ஊக்கமும், பரிசும் அளித்து வருவது தெரிந்ததே. புனேயில் ஒரு உயர் சாதிக்காரர், அரிசனப் பெண்ணை மணந்து கொண்டார். அதனால் அவருக்கு அவர் அலுவலகத்தில் சில சலுகைகள், விசேட பரிசுப் பணம் ஆகியவை கிடைத்தன. பெற்றுக் கொண்ட அவர் அந்தப் பெண்ணை விவாகரத்து செய்துவிட்டார். பிறகு



அரசு விதிப்படி இரண்டு வருடங்கள் காத்திருந்து அதே பெண்ணை மறுபடி மணந்து கொண்டார். மறுபடி சலுகை, மறுபடி விசேட பரிசுப் பணம்! அரசு விதி இதற்கு இடமளித்திருக்கிறது! இந்தத் 'தில்லு முல்லு'க்கு அந்தப் பெண்ணும் உடன் பட்டிருக்கிறாள்!

- டைம்ஸ் ஆஃப் இந்தியா

- ராமுசாமி

தேன். இதையே இனி கையாண்டால் என்ன? இதை அன்றி நமது நாட்டை உத்தாரணம் செய்ய எனக்கு வேறு வழி எதுவும் தோன்றவில்லை, மாலி!''

வீரமாலி சிறிது ஆழ்ந்து யோசித்தான். பிறகு தலையை மெதுவாக ஆட்டிக்கொண்டே ''ஆமாம், சுவாமி! தங்கள் எண்ணம் இப்போது புரிகிறது. இதுகூட சிறந்த யோசனை தான். ஏனெனில் நல்லதை நிலைநிறுத்த விரும்பும் ஒரு சின்னக் குழுவுக்குக்கூட இதன் மூலம் பெரிய பலன் கிடைத்து விடுகிறது.''

''ஒத்துக்கொண்டாயா? சரி! நானே மயிலாப்பூரிலிருந்து இருபதுபேர்தான் கிளம்புகிறோம். காலையில் போய் நகர் உள்ளே புகுந்து தாக்குகிறோம். சூறையாடுகிறோம். உடனே மறைகிறோம். சரிதானா?''

''சரிதான்!''

**ஸா**ந்தோமே அந்த இளங்காலையில் மிருதுவாக உறங்கிக் கொண்டிருந்தது.

அழகான லாந்தர் விளக்குகளால் இரவை மெல்லிய உஷத் காலமாக்கி, அருமையான மது, மாது, சூதாட்ட வகைகளால் அதன் ஒவ்வொரு விநாடிகளையும் சொர்க்க, ஆனந்த உல்லாச களிர்தமாகக் கழிப்பது:

இரவுகள் நடு நிசி தாண்டித் தேயும்போது மெள்ள ஆடிக்கொண்டே வீடுகளை அடைந்து தத்தம் பஞ்சணை மஞ்சங்களில் ஆனந்தமாக ஒரு தூக்கத்தை அனுபவிப்பது:

இப்படிப்பட்ட ஸாந்தோமேயில் அன்று காலை புலரும்போது,

இருபது ஈட்டிகளும் ஒரு தலைவனும் வெகு வேகமாக நுழைந்து கொண்டிருந்தார்கள்.

வந்தவர்கள் முதலில் வணிக வீதியை அடைந்து பெரிய மாளிகைகளின் வாயிற் கதவுகளைத் தாக்கினார்கள்.

அவர்கள் வந்த சில நிமிஷங்களில் வீதி திமர் என உசுப்பி விடப்பட்ட குழந்தை போலப் பிரலாபிக்கத் தொடங்கியது.

''விடாதே! உள்ளே போ! வெட்டு! ஜெய வேங்கடராஜா! குத்து!'' என்று பெரும் கூக்குரல்கள்.

ஒவ்வொரு மாளிகையிலும் அவர்கள் நுழைய, அவை ஒவ்வொன்றிலிருந்தும் இந்திய அடிமைகள் பீறிக்கொண்டு வெளியே பிச்சினார்கள்.

திகில் கலந்த மகிழ்ச்சி அவர்கள் முகங்களில் ஓடியது.

''ஓடு! ஓடு! நிற்காதே! பரங்கியை அடி. கொல்லு!''

சத்தங்கள் எங்கும் ஆக்ரோஷமாகத் தெறிக்க, சீக்கிரம் அந்த நாகரிக வணிக வீதி தன் அழகை இழந்து ஒரு விதவை போல் ஆகிவிட்டது.

அர்ச்சுனன் மேலேமேலே ஆக்கிரோஷமாகப் போய்க் கொண்டிருந்தான்.

ஒவ்வொரு இடத்திலும் வெற்றி மேல் வெற்றியாக அவனுக்குக் கிட்ட,

அவன் கண் முன்னே விஜயநகரக் கொடி மேலேமேலே ஏறிக் கம்பீரமாகப் பறப்பது போலும்,

அதில் கிரீடம் தரித்த கவர்ணமுகி புன்னகையோடு விகசித்து, சூரிய ஜோதியாகத் தெரிவது போன்றும்,

ஒரு அற்புதக் காட்சி ஜொலித்துக் கொண்டே வர,

ஹா, இதென்ன? இடுப்பில் இதென்ன கூர்மையான வலி!

முகம் உபாதையால் இறுக, மெள்ளத் திரும்பினான் அர்ச்சுனன்.

அவன் கண் விகாரமாகியது. (தொடரும்)

# அரும்புகள்



● நான்கு அரும்புகளும் பிரபல நடிகர்களும் நடித்த படம். எடுத்துக்கொண்ட விஷயமும் நல்லதுதான். சொல்லத்தான் முயன்றிருக்கிறார்கள். கொல்லத்தான் முடிந்துள்ளது. அரும்புகள் மலரவில்லை.

நான்கு பொடிப் பையன்கள் பிக்பாக்கெட்டில் ஆரம்பித்து காந்தியிடம் சரணடைந்து — மூவர் பிற்காலத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டராக மாறும் கதை. முடிவை ஆரம்பத்திலேயே காட்டி விடுவதால் சீட்டில் முள் குத்துகிறது நமக்கு. ஸ்ரீதேவியைக் ''காட்டி'' ஏதோ தகிடுதத்தம் பண்ணுகிறார்கள். இவர் குடியிருக்கும் குடிசை மட்டும் பூங்கா மத்தியில் தனிமையில் இருக்கிறதாம். படத்தில் உள்ள ஒரே உயிருள்ள இடம், நாகேஷ் உயிர் விடுவதுதான்.

| | |
|---|---|
| கொடுப்பது | ரூ. 2—90 |
| கிடைப்பது | ரூ. 0—00 |
| தண்டம் | ரூ. 2—90 |

சரத் பாபு, குட்டி பத்மினி எல்லாம் படத்தில் என்ன பேசுகிறார்கள், என்ன செய்கிறார்கள் என்று அவர்களுக்கும் புரியவில்லை. நமக்கும் விளங்கவில்லை.

ஆபத்பாந்தவனும் இடைவேளை வருகிறது. அதற்குப் பின்....

....அதற்குப் பின் யார் பார்த்தார்கள்!

— நளினிசாஸ்திரி

# பிலிப்ஸ்

ரு 1,650*

## இப்போது பிலிப்ஸ் வழங்குது ஒருங்கிணைந்த சர்க்யூட்! அது அளவில் சிறிது, ஆற்றலில் பெரிது; அதிக தெளிவான ஒலி.

பிலிப்ஸ், எலக்ட்ரானிக் உலகில் வழங்கிடும் புதிய விந்தை: ஒருங்கிணைந்த சர்க்யூட்— மிகத் தெள்ளத் தெளிவான ஒலி வழங்குது—மொத்தத்தில் நம்பகமானது பல்லாண்டுகளுக்கு.

அத்துடன், புதிய பிலிப்ஸ் பவர்-காம்பாக்ட், விரிவான ஃப்ரீக்வன்சி ரேஞ்ச்- எனவே, ஒலிப்பதிவை மீண்டும் அப்படியே கேட்கலாம்—அதன் வாட்டேஜ் வரிசையில்.

சிறப்பம்சங்கள்:

- விரிவான ஒலி முழக்கத்திற்கான 18 வாட்டுக்கள்
- 2 மைக்ரோ குருவ் ஸ்டைலி,
- டேப் ரிக்கார்டர்/ரேடியோவிற்கு தனித்தனியே ஆம்ப்ளிஃபையரை இயக்க முடியும்.
- ரிக்கார்டு முடிந்ததும் தானே நிறுத்திக் கொள்ளும் அமைப்பு.

உங்கள் பிலிப்ஸ் டீலரிடம் இலவச செயல்முறை விளக்கம் பெறலாம்.

OBM-6745 TM

* எக்சைஸ் தீர்வை உள்பட அதிகபட்ச சில்லறை விலை. மாநில விற்பனைவரி மற்றும் இதர உள்ளூர் வரிகள் தனி

## புதிய பிலிப்ஸ் பவர்–காம்பாக்ட் ஸ்டீரியோ சிஸ்டம் ஏ எஃப் 582




பீகோ எலக்ட்ரானிக்ஸ் அண்ட் எலக்ட்ரிகல்ஸ் லி.

# அந்தி நேரத்து உதயங்கள்

— வாஸந்தி

## 4

பஸ் ஸ்டாப்பில் எக்கச்சக்கமான கூட்டம் இருந்தது. சாந்தி க்யூவில் நின்று கொண்டாள். தினம் தினம் இங்கு சந்திக்கும் பரிச்சயமான முகங்கள் தெரிந்தன. காலையில் பஸ்ஸுக்காகக் காத்திருக்கும் அவசரமும் துடிப்பும் இப்பொழுது யாரிடமும் இல்லை. ஒரு சோர்வு கலந்த நிதானம் தெரிந்தது. ஆனால் இவர்களது சோர்விலும் நிதானத்திலும் ஒரு எதிர்பார்ப்பு அல்லது ஒரு எதிர் நோக்கு இருக்கும் என்று அவள் நினைத்துக் கொண்டாள். இவர்களது வரவுக்காகக் கரிசனத்துடன் வீட்டில் காத்திருக்க மனிதர்கள் இருப்பார்கள். இவர்களது சோர்வைப் புரிந்துகொண்டு இதமாக இரண்டு வார்த்தைகளைப் பேசும் மனிதர்கள்....

இரண்டு பஸ்கள் வந்து நின்று நிரப்பிக் கொண்டு போயின. க்யூ நகர்ந்து அவள் முன்னால் நகர்ந்தாள். வீட்டுக்குப் போகும் நினைப்பே அலுப்பைத் தந்தது. பேசாமல் இருபத்தி நான்கு மணி நேரமும் இந்த ஆஸ்பத்திரியிலேயே இருந்தால் எத்தனை நன்றாக இருக்கும் என்று தோன்றிற்று. எப்படி இந்த ஆஸ்பத்திரிக் கேட்டைத் தாண்டியதுமே ஒரு முகமூடியைக் கழற்றி வைத்த மாதிரி நம் உற்சாகமெல்லாம் மறைந்துபோகிறது என்று அவளுக்கு ஆச்சரியமேற்பட்டது.

''வேஷம் போடறே பெரிய நடிகை நீ! சினிமாவிலே சேர்ந்தியானா ரெண்டு காசு கூடவரும்!''

நிஜம்தானா? வேஷம்தான் போடுகிறோமா? ஆனால் அவர் எதிரில் மாத்திரம் நம் சிரிப்பு எப்படி மறைந்து போகிறது? மனசு விறைத்துப் போகிறது. அவர்தான் இயல்பாக இல்லை என்று அதற்கு அர்த்தமில்லையா? அவருடைய சுபாவம்தான் நம்மை அப்படி மாற்றுகிறது என்று அர்த்தமில்லையா?

பஸ் ஸ்டாப்பைத் தாண்டிக் கொண்டு ஒரு ஃபியட் போயிற்று. அதில் அந்தப் பெண் மாயா உட்கார்ந்திருந்தாள். சாந்திக்கு அடிவயிற்றைக் கலக்கிக்கொண்டு ஓர் அனுதாபம் எழுந்தது. இந்தப் பெண்ணின் மேல் ஹரிக்கு இருக்கும் பிரியம், மாயா என்கிற பெயரைச் சொன்னதுமே கண்களில் எப்படி ஜொலித்தது! அவனுடைய முகத்தில் அறிவின் தீட்சண்யம் தெரிந்தது. பார்வையில் ஒரு கனிவு தெரிந்தது. அவன் பிரியத்தைப் பரிபூர்ணமாகச் செலுத்தத் தெரிந்தவன். இந்த மாயா ரொம்ப அதிர்ஷ்டம் செய்தவளாக இருக்க வேண்டும். அவனுடைய தற்போதைய உண்மை நிலை தெரிந்தால் அவளுக்கு எப்படி இருக்கும்?

இன்றைக்கு மதியம் அவனுடைய நிலையைப் பற்றி ஆர்த்தோபீடிஸ்ட் டாக்டர் கிஷோர் தன்னுடைய அபிப்பிராயத்தைச் சொன்னபோது அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது. முதுகெலும்பும், கால், இடுப்பு, தசை நரம்புகளும் பெரிதும் சேதமடைந்திருப்பதால் அவன் மறுபடி நடப்பதென்பது அசாத்தியமான காரியமாக இருக்கும் என்றார். அன்று காலை அவனுக்கு இடுப்புக்குக் கீழ் சுரணை இல்லையோ என்று அவளே அனுமானித்தாள். மார்பிலிருந்து கணுக்கால் வரை பிளாஸ்டர். எப்படிப்பட்ட விபத்தில் மாட்டிக் கொண்டிருக்கிறான்! இத்தனை துடிப்புள்ள இளைஞன் நடக்க முடியாமல் போனால் மீதி வாழ்நாளை எப்படிக் கழிக்கப்போகிறான்?

இந்தப் பெண் — அவனுடைய காதலி அந்த நிலையை எப்படித் தாங்கப் போகிறாள்?

பஸ் வந்துவிட்டது. அவள் சட்டென்று சுயநினைவுக்கு வந்து முண்டியடித்துக்கொண்டு ஏறினாள். வீட்டை நெருங்க நெருங்க ஆஸ்பத்திரியைப் பற்றின கவலைகளும் யோசனைகளும் மறந்து போயின. பல ஃப்ளாட்களிலிருந்து தம்பதிகள் வெளியில் சென்று கொண்டிருந்தார்கள். எல்லோருடைய வாழ்க்கையும் இயல்பானது. நாம்தான் ஒரு அதிசயப் பிறவி. வலியப் போய் வாழ்க்கையைக் கெடுத்துக் கொண்ட அசட்டுப் பிறவி. காருண்யத்தினால் விளைந்த அசட்டுத்தனம். தனியாகவே வாழ்க்கையைத் தொடர்ந்திருந்தால் இத்தனை அலுப்பையும் சோர்வையும் அனுபவிக்க வேண்டிய அவசியம் இல்லாமல்போயிருக்கும்.

அவள் வழியில் தென்பட்ட பரிச்சயமானவர்களைப் பார்த்துப் புன்னகைத்துலிஃப்டில் ஏறித் தன் பகுதிக்குச் சென்றாள்.

வீடு ஒரே களேபரமாக இருந்தது. படுக்கை அறையில் கட்டில் மேல்



நூலை காணியும் போர்வையும் மூலைக் கொன்றாகச் சிதறியிருந்தன. அவிழ்த்துப் போட்ட லுங்கியும் அழுக்குச் சட்டைகளும் கட்டில் மேல்—யாரோ வேண்டுமென்று செய்த மாதிரி—

அவள் ஸ்கைப் பையை அலமாரிக்குள் வைத்து விட்டுக் காலையும் முகத்தையும் கழுவிக் கொண்டு சமையலறைக்குள் நுழைந்தாள். அவன் சாப்பிட்டு மிகுந்த பதார்த்தங்கள் அப்படியே திறந்தபடி கிடந்தன. சாப்பிட்ட தட்டு வறண்டுபோய் மேஜை மேல் கிடந்தது. திறந்திருந்த தயிர் பாத்திரத்தில் எறும்புகள் வரிசையாக அணி வகுத்திருந்தன. அவளுள் ஒரு மிதமிஞ்சிய ஆத்திரம் எழுந்தது.

இந்த மாதிரி ஒரு மனித ஜன்மம் இருக்குமா? இத்தனை தன்முனைப்பு ஒருத்தனுக்கு இருக்க முடியுமா? அந்தத் திறந்த பாத்திரங்களும் எறும்பும் படுக்கை அறையும் ஒரு மொத்தமாக அவளை அவமானப்படுத்துகிற மாதிரி இருந்தது. அந்த அவமானம் கண்களில் நீரை வரவழைத்தது.

அவள் அவசரமாகப் பாத்திரங்களை ஒழித்து மேடையைச் சுத்தம் செய்து தேநீருக்கு அடுப்பில் நீர் வைத்தாள். டீயை அருந்தியபடி மறுபடியும் அந்தச் சமையலறை ஜன்னல் வழியே பார்க்கையில் காலை நேர சுறுசுறுப்புக் குறைந்து மாலை நேர உல்லாசம் தெரிந்தது தெருவில். இப்பொழுது நிறையப் பெண்களும் குழந்தைகளும் ஆண்களுடன் சென்று கொண்டிருந்தார்கள். சரசரவென்று இருள் பரவுவதை உணர்ந்து அவள் சட்டென்று டீயைப் பருகி, படுக்கையறைக் களேபரத்தைச் சரிசெய்யச் சென்றாள்.

படுக்கையைச் சரிசெய்து அவனுடைய அழுக்குத் துணிகளைத் துவைத்து நிமிர்வதற்குள் ஏழு மணியாகி விட்டது. இன்னும் நடராஜனைக் காணவில்லை. அவள் அவசரமாகச் சமையல் செய்து வைத்தாள். அவன் சில சமயங்களில் வரும்போதே அசுரப் பசியுடன் வருவான். அடுப்படியில் அவள் இன்னும் வேலையாக இருப்பதைப் பார்த்தால் பயங்கரக் கோபம் வரும்.

"வீட்டுக்கு நேரத்தோட வந்திருக்க மாட்டே! எவனோட குலாவிண்டு உட்கார்ந்திருந்தே?"

"அசிங்கமா பேசாதீங்க. சமையல் ஆயிடுத்து. சாப்பிட வாங்க."

"ஏமாத்தப் பாக்காதே. நேரத்தோட வந்திருந்தா சமையல் எப்பவோ முடிஞ்சிருக்கும்."

அவள் பதிலே சொல்லாமல் அவசரமாக மேஜை மேல் சாப்பாட்டை வைப்பாள்.

"'இந்தா கொட்டிக்கோ'ன்னு நீ எனக்குப் போட வேண்டியதில்லே. உர்ருனு வீட்டிலே முகத்தைத் தூக்கி வெச்சிக்கறது எப்பவும். வெளியிலே கண்டவனை யெல்லாம் சிரிச்சு மயக்கறது! அப்படிச் சிரிக்கிறியே அவனெல்லாம் உனக்கு என்னடி கொடுக்கிறான்? ரெண்டு ரொட்டித் துண்டா?"

அவன் பேசப் பேச மண்டையில் இரத்த நாளங்கள் சூடேறி வெடித்து விடும்போல் புடைத்துக் கொள்ளும். மனத்தின் ஆத்திரத்தைக் கை நகங்கள் உள்ளங்கையில் புதைக்கப் பார்க்கும்.

சீ!

இவனையும் ஒரு மனுஷனாக மதித்து இவனுக்காகச் சமைத்து இவன் துணியைத் துவைத்து வைத்து இவன் படுக்கையைத் தட்டிப் போட்டு — இவனுடன் படுத்துக் கொண்டு—

நான் எதற்குச் செய்ய வேண்டும்?

ஏன் செய்கிறேன்?

வாயை மூடிக்கொண்டு?

அதுதான் அவளுக்கு இன்னும் புரியவில்லை. ஏதோ சத்தியத்துக்குக் கட்டுப்பட்ட மாதிரி ஏன் செய்கிறேன்?

சத்தியம்—

அதற்கெல்லாம் உண்மையில் அர்த்தமிருக்கிறதா?

பின் எதனால் செய்கிறேன்?

பத்தினித்தனமா?

நான் இவனது பத்தினி என்று இவன் மதிக்காதபோது இவனை எதற்காக என் பதி என்று நான் மரியாதை கொடுக்க வேண்டும்? உதறிவிட்டுப் போக ஏன் முடியவில்லை?

ஏதோ ஒன்று நம்மைத் தடுக்கிறது.

பயம்—

என்னைக் கண்டே எனக்குப் பயம். வாழ்வின் முக்கியமான கட்டத்தில் தோற்றுப் போனேன் என்று பகிரங்கமாக ஒப்புக்கொள்ளப் பயம். நூற்றுக் கணக்கான நோயாளிகளின் உடலுக்கும் மனத்துக்கும் சிகிச்சை செய்து குணப்படுத்தி வருபவளுக்கு ஒரே ஒரு நபரின் விபரீதப் போக்கைச் சரி செய்ய முடியவில்லை என்பது அவமானகரமான விஷயம் என்று தோன்றிப்போன எண்ணம். தினம் தினம் இந்த வீட்டில் நடப்பவையும் அவள் மீது வீசப்படும் அசிங்க வார்த்தைகளும் அவளுக்கு மட்டும்தான் தெரியும்

---

டிக்கட் இல்லாமல் ரயிலில் பயணம் செய்தார்கள் என்று சிலரை பாட்னு ரயில்வே நீதிபதிமுன் கொண்டு வந்து நிறுத்தினர்.

ஒரு போலீஸ் சூபரென்டெண்ட், ஒரு அடிஷனல் மாஜிஸ்ட்ரேட், சப்இன்ஸ்பெக்டர் ஒருவர் ஆகியோர் அந்தக் கும்பலில் இருந்தனர்!

அவர்கள் டிக்கட் வாங்காமல் முதல் வகுப்பில் பயணம் செய்தார்களாம்!

ஆதாரம்: டைம்ஸ் ஆஃப் இந்தியா
தகவல் : "சேலம் மதிகுடி"



# ஆரோக்கியம், ஆனந்தம்,
# ஒன்றுக்கொன்று ஆதாரம்

Cadbury's Bournvita
The tastier food drink

உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க போர்ன்விடா வழங்குங்கள். போர்ன்விடாவில் கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்துள்ளன.

இப்போது! பெரும் சேமிப்பு ஒரு முழு ரூபாய்
ரீ:பில் பேக்குடன்

காட்பரீஸ்
**போர்ன்விடா**
அளிப்பது அத்தனையும் நலம்

என்கிற பலவீனம் ஏற்படுத்தும் தயக்கம்.

அவனைப் பற்றி வெளியில் சொன்னால் யாரும் நம்ப வேண்டாமா?

காலிங் பெல் ஒலித்தது.

அவள் அவசரமாகத் தன்னை ஒரு நிலைப் படுத்திக் கொண்டு கதவைத் திறந்தாள்.

நடராஜன் ஒரு விநாடி அவளைப் பார்த்த படி வெளியே நின்றான். பிறகு ஒரு ஏகத் தாளப் புன்னகையுடன் உள்ளே நுழைந்தான்.

அவள் எதுவும் பேசாமல் நேராகச் சமையல் அறைக்குச் சென்று அவனுக்குச் சாப் பாட்டை எடுத்து வைத்தாள்.

அவன் பாத்ரூமுக்குப் பெருத்த ஆரவாரத் துடன் சென்று குளிப்பது கேட்டது.

அவன் சாப்பாட்டு மேஜைக்கு வருகையில் கண்கள் சிவந்திருப்பதைக் கவனித்தாள்.

ஒரு நாளைக்கு எத்தனை குடிப்பான் இவன்? இவன் எந்த அளவுக்கு ஆபீஸில் தன் திறமையைக் காண்பிப்பான்! இவன் சம் பாத்திய மெல்லாம் இவனுடைய சொந்த இச்சைகளுக்கு மட்டும்தான் என்று நினைக் கையில் அவனுக்கு எல்லாம் செய்து போடு வது அவளது கடமை என்கிற மாதிரி அவன் நடந்து கொள்வது அவளுக்கு மிகப் பெரிய அதிர்ச்சியாக இருந்தது. இதை ஒரு அவ மானமாக இவன் ஏன் கருதவில்லை?

''என்ன, சாப்பாடு போடப் போறியா இல்லை, முகத்தைப் பார்த்துக்குனு உக்காரப் போறியா?''

அவள் சட்டென்று எழுந்து பரிமாறினாள்.

''என்னடி வாயிலே கொழுக்கட்டையா?''

அவள் லேசாகச் சிரித்தாள்.

''என்ன பேசட்டும்?''

''ஆமாம், என்கிட்டப் பேச உனக்கு விஷ யமே இருக்காது. நீ பேசறதும், சிரிக்கறதும் மத்தவங்ககிட்டதான்!''

''இதானே வேண்டாம்கிறது!''

''அது உண்மையா இல்லையான்னு சொல்லு.''

''அது உண்மை இல்லேன்னு நீங்க நம்ப நீங்களா?''

''அது நம்ப முடியாத விஷயம்னு உனக்கே தெரியும்.''

அவளுக்கு அலுப்பு ஏற்பட்டது. தினமும் இவன் இதே மாதிரி ஒரு சம்பாஷணையை ஆரம்பித்து இதே ரீதியில் பேசி, கடைசியில் அவளை மொத்துகிற வரை தொடருகிறான். இதில் இவனுக்கு என்ன வக்ர திருப்தி?

அவள் ஏதும் சொல்லாமல் தன் தட்டை எடுத்து வைத்துக் கொண்டாள். வயிறு அகோரமாகப் பசித்தது.

''நா சாப்பிடறேன் ப்ளீஸ். ரொம்பப் பசிக்கிறது.''

''இத பாரு. இந்த மாதிரி வேஷம் போடாதே. பெரிய பத்தினி மாதிரி. நீ சாப்பிடறதை நா தடுக்கற மாதிரி பேசாதே. கெட்ட கோபம் வரும் எனக்கு.''

பேசினாலும் பேசாவிட்டாலும் சிரித்தா லும் சிரிக்காவிட்டாலும் இவனுக்குக் கோபம் வரும் என்ற ஆயாசத்துடன் அவள் சாப்பிட உட்கார்ந்தாள். பாதி வயிறு நிரம்பியதும் நீரைக் குடித்து விட்டு அவள் மெள்ளக் கேட்டாள்:

''இன்னிக்கு எப்ப எழுந்திண்டு ஆபீ ஸுக்குப் போனேள்? நா கிளம்பறவரை நீங்க எழுந்திருக்கல்லே!''

அவன் சரேலென்று எழுந்தான். அவ ளுடையமயிரை இடது கையால் பிடித்து ஒரு உலுக்கு உலுக்கினான்.

''நா எப்ப எழுந்திண்டா உனக்கென்ன, நா எப்ப ஆபீஸுக்குப் போனா உனக் கென்ன?''

அவனது வேண்டாத ஆக்ரோஷத்தைப் பார்த்து அவள் நரம்புகளில் வழக்கம்போல் ஒரு ஜில்லிப்பு ஓடிற்று. அவள் சட்டென்று பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள்.

''ஸாரி.''

உள்ளுக்குள் மனசு ஓராயிரம் கேள்விகள் கேட்டது.

'நீமாத்திரம் என்னைக் கேக்கறியே? நான் யாரோட பேசினா உனக்கென்ன? நான் யாரைப் பார்த்துச் சிரிச்சா உனக்கென்ன?'

அவன் மறுபடி ஒரு உறுமலுடன் அவளைப் பார்த்துவிட்டுக் கையை எடுத்தான்.

''ஏதாவது மரியாதை இல்லாமப் பேசினே, பல்லத் தட்டிப்புடுவேன். நா ஆஃபீஸ் போறதை உன்கிட்டச் சொல்லிண்டுதான் போகணுமா? இஷ்டமிருந்தா போவேன் இல்லேன்னா போக மாட்டேன்!''

இவனது திமிர் கோபத்துக்குப் புதிய காரணம் ஏதாவது இருக்குமா என யோசித்த படி அவள் சாப்பாட்டை முடித்தாள்.

அவன் சாப்பிட்டு எழுந்து சென்ற பிறகு அவள் வெகு நேரம் சமையலறையில் வேலையில் இருக்கிற மாதிரி பாவனை செய் தாள். பிறகு முன்னறையில் உட்கார்ந்து பேப்பர் படித்தாள். கண்ணை அழுத்திக் கொண்டு வந்தது. அவன் தூங்கியிருப்பான் என்கிற நிச்சயத்துடன் அவள் எழுந்து இருண்டிருந்த படுக்கை அறைக்குச் சென்று கட்டிலில் படுத்துக் கொண்டாள்.

சரேலென்று அவன் அவள் மேல் பாய்ந் தான். அவள் திகைத்துப் போய் அரு வெறுப்புடன் அவனை விலக்கப் பார்க்கையில் அவன் ஆக்ரோஷத்துடன் தன் பலத்தைப் பலாத்காரத்தில் காண்பித்தான்.

''இதுக்குக்கூட உபயோகமில்லாத பொன் ஜாதின்னு நீ எதுக்கு எனக்கு? தூ!''

அவள் கண்களிலிருந்து சரம் சரமாய் நீர் வழிந்தது. தினம் தினம் எனக்கேற்படும் கற்பழிப்பு இது.....

அடிவயிற்றிலிருந்து ஒரு தீ மூண்டது. மெல்ல மெல்ல எழுந்து விசுவரூபமாகிமனசை ஆக்ரமித்தது.

(தொடரும்)

---

பாரசீகத்தை ஆண்ட ஷா ஹொர்முஸ் இறந்துவிட்டார். அப்பொழுது அவருடைய மனைவியான பட்டத்தரசி கர்ப்பமுற்றிருந்தாள். இறந்த மன்னருக்குப் பின் உடனடியாக நாட்டை ஆள வாரிசு இல்லாததால் அரசைக் கைப்பற்ற பலர் முயன்றனர். அதைக் கண்டு ராஜப் பிரதானிகள் கலங்கினர். அரசிக்கு ஆண் குழந்தைதான் பிறக்கும் என்று ஜோசியர்கள் கூறினார்கள். உடனே அரசியின் வயிற்றில் இருந்த சிசுவுக்கு முடி சூட்டத் தீர்மானித்தனர். அரசியைப் படுக்க வைத்தனர். அவள் வயிற்றின் மீது கிரீடத்தை வைத்து முடிசூட்டு விழா நடத்தினர்.

அந்தக் குழந்தைதான் பாரசீகத்தை நீண்டகாலம் ஆண்ட இரண்டாவது ஸாபர். - பி. நாராயணன்

## உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...






செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. 6. TM

டேக் 1

கமான்!

க்ளாப்ஸ்!

படபடவென்ற கைதட்டல்.

வெள்ளித் திரையை சூபர் சர்ஃபில் தோய்த்தது போல் வெள்ளை வெளேர் ஃபுல் கை ஷர்ட்டை இன் பண்ணிக்கொண்டு அதிகாரிகள் புடைசூழ, ராஜ பார்வையுடன் உள்ளே நுழைந்தார் கமலஹாசன்!

''த்ரீ சியர்ஸ் ஃபார் சேல்ஸ் எக்ஸிக்யூடிவ் கமல்! த்ரீ சியர்ஸ்!''

''நோ தாங்க்ஸ்!'' கைகளால் சைகை காட்டியபடி தலையை லேசாக அசைத்தபடி எல்லார் மீதும் பார்வையை வீசியபடி நுழைந்தார்.

அவருக்கான அரியாசனத்தில் அமர்ந்ததும் பெருமிதம் அடைகிறது. ஹாசன் பிரதாஸ் உலகத்தை ஒதுக்கிவிட்டு இந்த ஹாசன் பிரதர்ஸ் நிர்வாகத்துக்குக் கை கொடுக்க வந்திருக்கிறார்.

மெல்லிசையை உதறிவிட்டு சாஸ்திரிய சங்கீதத்தை அணைத்த சங்கராபரணம் துணிச்சலோடு இங்கே சேர்ந்திருக்கிறார்.

யாரோ ஒருவர் எழுந்து மாலை போட, மறுபடியும் அந்த டாஜ் ஒட்டலின் கான்ஃபரன்ஸ் ஹால் அதிர்ந்தது.

''...சேல்ஸுக்குத் தேவையான குவாலிபிகேஷன் — வசீகரிக்கும் குணாதிசயம். ஓஹோ வென்ற பர்ஸனாலிடியுள்ள கமல் இந்தப் பதவிக்கு ஏற்றவர். நிகரற்றவர். பேச்சில் நகைச்சுவை கலந்த அலட்சியம், வாக





வம்,சாமர்த்தியம், சாணம்... இந்தப் பத விக்கு டெய்லர் மேட்மான்!''

கைதட்டல்!

''அவருடைய சக்ர வசீகரம் கோடௌனைக் கூடக் கோபுரமாக்கிவிடும்...''

கமல் குறுக்கிட்டார்.

''கோடௌன் குடிசையாகாமல் இருந்-தால் சரி....''

''நோ...நோ... கமல்... நோ ஜோக்ஸ்''— எம். டி. கமெண்ட்ஸ்.

சேல்ஸ் டிவிஷன் சம்பந்தப்பட்ட விருந்தினர்களுக்கிடையே ஒரு அவசர பத்திரிகை நிருபர்,

''என்ன சார்... என்ன இந்த முடிவு?''

''இட்ஸ் மை ப்ளஷர் டு அக்ஸெப்ட் திஸ் ஜாப்! உழைப்பு — அது எங்கிருந்தால் என்ன? ஐ ஸிம்ப்ளி லவ் திஸ் ஜாப்....''

தொடர்ந்தார்.

புதிய வேலையை முதலிரவு நாயகியை வர்ணிப்பது போல் வர்ணித்தார் கமல்!

வாணி கமல் பக்கமாகத் திரும்பினார்.

புன்னகை!

## டேக் 2

சீழல் மெத்தை நாற்காலியில் கமல்!

''மாமனார் மிஸ்டர் கணபதி ஜியாக்ப்ரி மானர்ஸ் சேல்ஸ் டிவிஷனில் புள்ளி. உயர மான புள்ளி.

''மாப்பிள்ளையும் அதே லைனிலா? இன்ஸ் பிரேஷனா? அப்படித்தானா?''

ஸ்டெனோ-கம் - செக்ரட்டரி ப்ரீதி சற்றுச் சுதந்திரமாகக் கேட்க...

கமல் சிரித்தார்.

மேஜையின் கால்கள் வழியாக காமிரா பார்க்கிறது.

தம் தலையைக் கோதியபடி ப்ரீதியைப் பார்வையிடுகிறார் கமல்.

கண்கள் 'வால்' எல் லென்றன.

எழுந்தார்.

''ஹலோ ப்ரீதி! இந்த அறையில் என்னென்ன எங்கெங்கு இருக்க வேண்டும் என்பதைச் சொல்கிறேன்... பத்து ஸ்டெப்ஸ் இங்கிருந்து அந்த ஃப்ளவர் வாஸ்... இடது பக்கமாய் ஐந்து ஸ்டெப்ஸ் சோபா... வலது பக்கமாய் நேராய் பன்னிரண்டு ஸ்டெப்ஸ் சின்ன ஷெல்ஃப்! பிறகு ஆறு ஸ்டெப்ஸ்....''

செக்ரட்டரி — அந்த இளம் மாது. மார்பு விம்ம, அவரைப் பரிதாபமாய்ப் பார்த்தாள்.

''சாரி ஸார்....'' அவள் கண்களில் பச்சாதாபம் இருந்தது. ''...சார் ராஜ பார்வை படத்தில் வந்தது போல்...''

கமல் பெரிதாகச் சிரித்தார்.

''நோ....நோ... என் குருநாதர் பாலசந்தர் அருளால், பார்வை தீட்சண்யமாய்த்தான் இருக்கிறது. ஐ அம் ஓகே! ஜஸ்ட் ஒரு எஸ்திடிக் ப்யூட்டிக்காக... 'அது அது' இருக்க வேண்டிய இடத்தில் இருக்க வேண்டும் என்று....''

கடைசி வார்த்தையின் இரட்டை அர்த்தம்.

கண்ணடித்தார் கமல்.

அந்த ப்ரீதி சிரித்தாள் ஸ்ரீதேவியைப் போல்!

களுக்!

## டேக் 3

டெலிபோன் சிவந்த மேனியுடன் கணகணத்தது. அதன் ரிசீவரின் இடையை வாணியை அணைப்பது போல் அணைத்தார் கமல்.

'':கமல் ஸ்பீக்கிங்.''

''சேல்ஸ் டைரக்டர் ஸ்பீக்கிங்.''

''டைரக்டரா?.... எத்தனை மணிக்கு ஷூட்டிங் சார்... ஷெட்யூல் எங்கே ஏ.வி.எம்.மிலா?''

''வாட்?''

''ஓ! ஸாரி சார். டைரக்டர் என்ற வார்த்தை காதில் விழுந்ததும்... பழைய ஞாபகம்... வெரி சாரி...''



# லாரிடிரைவர் ராஜாக்கண்ணு

யார் சொன்னது லாரி டிரைவர்கள் ஏழைகள் என்று? இதோ இங்கு 'ஐந்து நிமிடத்துக்கு ஒரு டெரின்கோட்டை மாட்டிக்கொண்டு டுயட், சண்டை என்று வாரி வழங்குகிறார் லாரி டிரைவர் — கம் — ஓனர் ராஜாக்கண்ணு.

கதை சொன்னால் 'சீ... வேண்டாம்!... புதுசா ஏதாவது சொல்' என்று பத்து வயதுச் சிறுவன்கூட முரண்டு பிடிப்பான். எப்பவும் போலவே ஹீரோவுக்கு ஒரு தங்கை — கண்ணில்லாத குறை வேறு! மாரோடு சேர்த்தணைத்துப் பாட்டுப் பாடி நேசம் செய்கிறார் ராஜாக்கண்ணு.

இடைவேளை வரை பிறர் குறை தீர்த்து, பின் தான் செய்யாத குற்றத்தால் சிறை சென்று, 'உயிர் துறந்தாவது உன்னைப் பழி தீர்ப்பேன்' என்ற சூளுரையுடன் தப்பிக்கும் ராஜாக்கண்ணு 'ட்ராவல்ட்டோ' நடன வகைகளுடன் வில்லனைத் தீர்க்கிறார். துணைக்கு மேஜர். இருவரும் கமல்—ரஜினி டீம் என்ற நினைப்புடன் ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள். இளமையின் உயிர் ஊசலாடுகிறது!

பாம்பின் விஷமேற்றி, பல் முளைத்து, ட்ராகுலா ஸ்டைலில் கடித்து... அஷ்ட கோணல் முகமும், மனிதப் பாம்பாய் மாறி ஊர்வதும் நெளிவதும்.... மற்றவர்களுக்கு நம்பியார் தேவலே என்று படுகிறது.

நல்ல அம்சம் என்று தேடினால் விநாயகத்தின் வெளிப்புறப் படப்பிடிப்பைச் சொல்லலாம். படத்தில் வந்தவரை திருப்தி செய்கிறார் சுருளி—மனோரமாவுடன். ஸ்ரீப்ரியா— ஸாரி, நோ கமெண்ட்ஸ்!

கேட்கும்போதே உடன் மறந்துபோகும் இசை எம். எஸ். வி. யினுடையது. என்டிஆரின் தெலுங்கு மசாலாவைத் தமிழ்ப்படுத்த திருலோகசந்தர் பட்ட கஷ்டம் வீண்! அபாரமான செட்களைப் போட்டிருக்கும் ஆர்ட் டைரக்டரை மட்டும் பாராட்டி வைப்போம்.

ஜெயமாலினியுடன் அசிங்கமான சேஷ்டைகளுடன் நடனமாடி என்ன சாதிக்கப் போகிறார் சிவாஜி? 'ஏ' சர்ட்டிபிகேட் என்றால் 'ஏமாந்தவர்களுக்கு மட்டும்' என்று அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம்.

—'சிந்து-ஜீவா'

''தாட்ஸ் ஆல் ரைட்!'' — சிரித்தார் சேல்ஸ் டைரக்டர்.

''சார் நம் நிர்வாகத்தின் சேல்ஸ் உயரச் சில யோசனைகள், திட்டங்கள் வைத்திருக்கிறேன்!''

''சொல்லுங்கள்....''

''கொஞ்சம் பொறுமையுடன் கேளுங்கள். ஆரம்பத்தில் ஸ்லோ மோஷனில் ஐடியா வந்து... பிறகுதான்....''

''ஓகே! ஓகே! சொல்லுங்கள்!''

''அதற்குச் செலவெல்லாம் நிறைய ஆகும். தாராளமாக ஆகும். கஞ்சத்தனமான ப்ரொட்யூசரிடம் மாட்டித் தவிக்கும் ப்ரொடக்ஷன் மானேஜரைப் போல, டைரக்டரைப் போல என்னை மாட்டி விடாதீர்கள்.''

''நோ...நோ... என்ன பட்ஜெட் சொல்லுங்க சார். அதற்கு மேலேயே சாங்ஷன் செய்கிறேன். கேரி ஆன்....''

கமலின் காமிரா மூளையில் கற்பனை ஃபிலிம் ஓட ஆரம்பித்தது.

அந்த அறையில் வால் பிக்சரில் ஆசையாய், ஆவேசமாய் அருவி பாய்ந்து நிலமகளைக் குளித்துச் சுகம் பெற வைத்துக் கொண்டிருந்தது. அருவியின் கரையில் அந்தப் பெண், தன் அழகான பிரதேசங்களைக் கமலுக்குக் காட்டியவாறு, அவரை மகிழ்வித்துக் கொண்டிருந்தாள் — வாணி அங்கு இல்லை என்கிற தைரியத்தில்!

கமல் ட்ரிம்மாக இருந்தார். அந்த ஹேர் ஸ்டைல்! புதுமுக நடிகையிடம் சிச்சுவேஷனை, டயலாக்கை விளக்கும் டைரக்டரைப் போல ஆரம்பித்தார் பீடிகையுடன்;

''ஸார், கேக்கறீங்களா?''

''யெஸ்....''

''நம்ம சேல்ஸ் டிவிஷனில் பணிபுரிகிறவர்கள் சேல்ஸ் வேலைக்கு ஃபீல்டிற்குப் போகிறவர்கள். ஷோரூமில் இருப்பவர்கள் இன்னின்ன நேரத்தில் இன்னின்ன பொருட்களை விற்பனை செய்யும்போது இன்னின்ன உடைகளை, இன்னின்ன விதத்தில் அணிய வேண்டும் என்று முறை இருக்கிறது. அதைத் தீர்மானிக்க ஒரு ஸ்பெஷலிஸ்ட்! அட்வைஸர் தேவை. அதற்கு வாணியைச் செலக்ட் பண்ணுகிறேன்.

''நெபாடிஸம் என்று நினைக்காதீர்கள்... ஷி இஸ் க்ளவர் இன் டிரெஸ் செலக்ஷன். என் பலரக வேடங்களுக்கு அவள் சரியாக, கச்சிதமாய் செலக்ட் பண்ணிய அனுபவம். கடல் போன்ற அனுபவம். அதற்காகத்தான். ஷி இஸ் கிரேட் இன் திஸ் ரெஸ்பக்ட்... யுவர் ஒப்பினியன் ஸார்....''

''கேர்ரி ஆன்... கோ அஹெட்...''

கமல் களைத்துக் கொண்டார்.

''ஐடியா வந்திரிச்சி'' என்று கல்யாணராமன் தனமாய் அவரது மூளை இசை பாடியது.

மளமளவென்று பொரிந்து தள்ளினார்.

''ஃபைனலி ஒரு ஃபிலிம் எடுக்க வேண்டும். அட்வர்டைசிங் பப்ளிசிட்டி... எல்லாம் இதில் அடங்கும். ஆர்ட்டிஸ்ட் செலக்ஷன் என்னிடம் விட்டுவிடுங்கள். நம் ஐ லைனருக்கு மாதவியை, லிப்ஸ்டிக்கிற்கு தீபாவை... ஹேர் ஆயிலுக்கு

பல் டாக்டர்கள் கூறுகிறார்கள்

பற்கள், ஈறுகளின் முறையான பராமரிப்பிற்கு, பற்களை பிரஷ் செய்வது போன்றே ஈறுகளைத் தேய்த்துக் கொடுப்பதும் அவசியமாகும்

# போர்ஹென்ஸ் டபிள் ஆக்ஷன் டூத்பிரஷ் உபயோகியுங்கள்

இது உங்கள் பற்களை பிரஷ் செய்யும்போதே ஈறுகளையும் தேய்த்துக் கொடுப்பதற்கேற்ப விசேட முறையில் உருவாக்கப்பட்டது

மென்மையான
வெண்ணிறக்
குச்சங்கள் உங்கள்
ஈறுகளைத் தேய்த்துக்
கொடுக்கின்றன

உறுதியான
நீல நிறக்
குச்சங்கள்
உங்கள் பற்களைத்
துலக்குகின்றன

## போர்ஹென்ஸ்
## டூத்பிரஷ்

குடும்பத்தினர் எல்லோருக்கும்
அடல்ட் (மீடியம், சாஃப்ட்),
ஜூனியர், பேபி

ஸ்ரீதேவியை... ஸ்னேஹவுக்கு ஸ்வப்னாவை... பவுடருக்கு என் பர்சனல் அஸிஸ்டெண்ட் ப்ரீதியை.... ஐ திங்க் மை செலக்‌ஷன் இஸ் ஓ.கே!''

''குட்....குட்.... கோ அஹெட்!'' சேல்ஸ் டைரக்டர் வானில் மிதந்துகொண்டிருந்தார். நட்சத்திரத் தேவதைகளின் பட்டியலில் மயங்கிக் கொண்டிருந்தார்!

கமலின் செக்ரட்டரி இனிய நகையை இதழ்களில் அணிந்தவாறு குறிப்பெடுத்துக் கொண்டிருந்தாள்.

கமல் தொடர்ந்தார்.

''ஸார்... அந்த விளம்பரப் படம் கமர்ஷியல் ஹிட்டாக அமைய ஒரு கார் சேஸ்... ஒரு கிளப் டான்ஸ் – மசாலா இருக்கும்...''

''மசாலாவா? மிஸ்டர் கமல்! நாம்ப மசாலா தயார் பண்றதில்லையே! காஸ்மடிக் சாதனங்கள் மட்டும்தான் தயாரிக்கிறோம்!''

கமல் தலையில் அடித்துக் கொண்டார்.

''நோ ஸார்... மசாலா.... ஐ மீன் ஜனரஞ்சகமாக என்று சொல்ல வந்தேன்...''

''ஓகே! ஓகே!''

''பத்திரிகைகள் நம் பக்க பலமாக இருப்பார்கள். தாராளமாய் ஒரு முழு பக்க விளம்பரம் கொடுங்கள் எல்லாருக்கும்.''

''ரைட்டோ.''

''....தென் அந்த விளம்பர படத்திற்கான ஷூட்டிங்கை நாளை ஆரம்பிச்சிடறேன் ஸார்....''

''ஓகே!''

வால் பிக்சர் ஈர அழகி மார்பு நிமிரச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

## டேக் 4

கமல் அவசரமாய் வாஹினியின் மூன்றாவது ஃப்ளோரில் நுழைந்து கொண்டிருந்தார்.

ஏதோ தீவிர யோசனை.

உலகப் பட விழாவில் புது ஐடியாக் கிடைத்த டைரக்டரைப் போல் துள்ளிக் கொண்டு போனார்.

''மாதவிக்கு டயல் பண்ணு....

''அந்த செட் போட்டாயிற்றா?....''

பொரிந்து தள்ளிக் கொண்டிருந்தார்.

நுழைந்தார்,

—பாலசந்தர்.

''என்னடா கமல்?''

''வணக்கம் சார்!''

''ஏதோ கேள்விப்பட்டேன்.... சேல்ஸ் எக்ஸிகியூட்டிவ் வேலைக்குச் சேர்ந்திருக்கிறயாமே... என்ன இந்தத் தில்லு முல்லு எல்லாம்!''

''சார்! இந்தச் சினிமா ஃபீல்டே ஒரு நூல்வேலி மாதிரிதான் சார். பத்திரமில்லாதது. நிரந்தரமில்லாதது. உத்திரவாதமில்லாதது. ஜனங்க நினைச்சாத் தூக்கறாங்க. நினைச்சா சரிக்கக் கடாசிடறாங்க...''

''வாஸ்தவம்தான்டா.... அது சரி.... இங்கே என்ன வேலை? ஆபீஸிலே ஒழுங்கா வேலை பார்க்க வேண்டியதுதானே... இங்கே என்னடா உலாத்திக்கிட்டு....?''



''ஸார் படம் பிடிக்கிறேன்... கம்பெனி பிராடக்ட்ஸ் பப்ளிசிட்டி படம். இந்த மூன்றாவது ஃப்ளோர்ல பாருங்க. அந்த ஸெட் எஃபக்டே வர மாட்டேங்குது. இப்ப என்ன ஆகிறதுன்னா நடிகை குளிச்சிட்டுக் கண்ணாடி முன்னே நின்னு... மெல்ல உடை நழுவ... அதில் நடிக்கிற என் பர்சனல் செக்ரட்டரி வெறும் முதுகைக் காட்ட, பவுடரை எடுக்க.... என் சேல்ஸ் அஸிஸ்டெண்ட் அவளை நெருங்க, அவள் ஒயிலாய்த் திரும்ப...''

பாலசந்தர் நெற்றியின் நடு மத்தியில் அடித்துக் கொண்டார்.

''என்னதான் கௌரவா சேல்ஸ் எக்ஸிக்யூடிவ் வேலைக்குப் போய்ச் சேர்ந்தாலும் இந்த ஸ்டுடியோ புத்தி போகலே பார்த்தியா?

நானும் ஏ.ஜி.எஸ். ஆபீஸிலே போய் மறுபடியும் சேரலாம்னு இருக்கேன்!''

''வேணாம் சார்... வேணாம்...''

''ஏன்டா?''

''ஐயைய்யோ வேணாம்... நீங்க அங்கிருந்து ரிஸைன் பண்ணின நாளிலிருந்து இன்னி தேதி வரை ஒரு மாதிரியா அங்கே ஸிஸ்டமாடிக்கா வேலை நடக்கிறதா கேள்வி.''

''படவா ராஸ்கல்!'' — பாய்ந்தார் பாலசந்தர்!

—ஓடினார் கமல்!

இன்னிக்கி என் இண்டர்வியூவை எப்படித்தான் சமாளிக்கப் போறேனோ? எனக்குக் கடுமையான தலைவலி.

நான் சொல்றதைக் கேளுங்க, அனாஸின் சாப்பிடுங்க!

# விரைவில் நிவாரணம் பெற சக்தி வாய்ந்த, நம்பகமான அனாஸின் சாப்பிடுங்கள்

சக்தி வாய்ந்தது: உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலிநிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

நம்பகமானது: டாக்டரின் நம்பகமான மருந்தைப்போல பல மருந்துகளின் கலவையே அனாஸின். ஆகையால்தான் லட்சக்கணக்கானவர்கள் அனாஸின் சாப்பிடுகிறார்கள்; சிபாரிசும் செய்கிறார்கள்.

ஜலதோஷம் மற்றும் ஃப்ளுவினால் ஏற்படும் வலிகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி.



சக்தி வாய்ந்த, நம்பகமான
மேனர்ஸ்
அனாஸின்*

இந்தியாவின் புகழ்பெற்ற வலி நிவாரணி

அளிப்பவர்கள்: ஜெஃப்ரி மேனர்ஸின் அனாஸின் பிரிவினர்.

* Regd TM

A33-7/77A

# செய்திகள், வாசிப்பது கருணாநிதி!



● அண்ணாசாலை அஞ்சல் நிலையத்தில் கண்ட காட்சி. ஒரு பெரிய உறையைக் கொண்டு வந்த இளைஞர், அதில் எவ்வளவு அஞ்சல் தலைகள் ஒட்டவேண்டும் என்று எடை போடு பவரைக் கேட்க, அவர் ஒரு ரூபாய் பத்துக் காசு என்றார். ஆனால் அந்த இளைஞர் 0.90 என உறையின் மீது நன்றாகத் தெரியும்படி பெரிதாக எழுதிவிட்டு, தொண்ணூறு காசுக்கு மட்டுமே அஞ்சல் தலைகள் வாங்கி ஒட்டி அவ்வுறையை அஞ்சல் செய்து விட்டார். எடை போடுபவர் 1.10 எனக் கூறியிருக்க 0.90 ஒட்டினால் எப்படி என்று நான் வினவிய போது இளைஞர் கூறினர்: "அது பரம இரகசியம் ஸார். கவரின் மீது நான் எழுதிய '0.90' என்பதை எடை போடுபவர் எழுதிய தாக அஞ்சல் துறையினர் கருதிவிடுவதால் குறைவாக ஸ்டாம்ப் ஒட்டினாலும் யாரும் கண்டுபிடிக்கப் போவதில்லை." பல வருஷங்களாக இந்த முறையைப் பின்பற்றி ஏமாற்றுகிறாராம் அவர்.



● சினிமா நடிகர் நடிகைகள் பேட்டி, விமரிசனங்கள், சினிமா வசனங்கள், பாடல்கள் ஆகியவற்றை 'டேப்' செய்து, 'பேசும் சினிமாப் பத்திரிகை' என்ற பெயரில் எல். ஆர். நாராயணன் விற்பனை செய்து வருகிறாராம். பத்திரிகையைப் படிக்க இயலா கண் பார்வையற்றோர்க்கு இது வரப்பிரசாதம்.

● குருவாயூர் கோயில் கர்ப்பக்கிரஹம் மற்றும் கொடிமரம் ஆகியவை ரூ. 330 லட்சத்துக்கு 'இன்சூர்' செய்யப்பட்டுள்ளதாம். பிரிமியம் மட்டும் ஆண்டொன்றுக்கு ரூ. 40000. ஆனால் கோவிலின் மூல விக்ரஹம் இன்சூர் செய்யப்படாததற்குக் காரணம்கேட்டபோது "கடவுளை மதிப்பிட முடியாது. மேலும் அவருக்குத் தன்னை எப்படிக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்பது தெரியும்" என கோவில் நிர்வாகத்தினர் கூறுகிறார்களாம். அவர்களின் கூற்றுக்குப் பாராட்டுக்கள்.

● ஒரு திருமணம். மணமகன் காலை முதல் இரவுவரை கறுப்புக் கண்ணாடி அணிந்திருந்தார். ஒரு நிமிடம் கூடக் கழற்றவில்லை. ஒருவேளை மாப்பிள்ளைக்கு 'மெட்ராஸ் ஐ' யாக இருக்குமோ என்று விசாரித்தபோது கிடைத்த செய்தி — மணமகனும் மணமகளும் காதலித்துக் கல்யாணம் செய்பவர்களாம். முதன் முதலில் காதலி பரிசளித்த கண்ணாடியை அணிந்து கொண்டு கல்யாணம் செய்வதை மாப்பிள்ளை பெருமையோடு கூறினார்.

● திருப்பதி வெங்கடேசப் பெருமாள் கோவில் உண்டியல் நிரம்பி வழிவதுதான் காரணமோ என்னவோ, "பிறருக்குச் செய்யும் உதவி ஆண்டவனுக்குச்செய்யும் சேவை" என ஆங்கிலத்தில் அமைந்த அழகான விளம்பரப் பலகைகளைச் சில இரயில் நிலையங்களில் திருப்பதி தேவஸ்தானம் நிறுவியுள்ளது.



● பிள்ளைப் பாசம் எத்தகைய ஆழமானது என்பதற்கு ஒரு நிகழ்ச்சி. நுங்கம்பாக்கத்தைச் சார்ந்த ஒருவர் காணாமல் போன தன் மகனைக் கண்டுபிடித்துத் தருபவர்களுக்கு ரூ. 500 பரிசளிக்கப்படும் என நோட்டீஸ் அச்சடித்து மின் வண்டியின் ஒவ்வொரு பெட்டியிலும் ஒட்டியிருக்கிறார்.

● சென்னை வானொலி மாநிலச் செய்தி வாசிப்பவர் ஒருவரின் பெயர் கருணாநிதி. "செய்திகள் — வாசிப்பவர் கருணாநிதி" என அவர் கூறும்போது ஏதோ ஒரு மாதிரி தோன்றுகிறது.

—யெம்ஜி

## ஒரு பிடி அவல்



ராங் நம்பராக
இருந்தால் என்ன?
ஏதாவது பேசலாமே..
... தீபாவளிக்கு
என்ன பாலியெஸ்
டரா, பட்டா...?




ஹேர் ஸ்டைல்
ஸ்கிப்பிங் ஆட
கத்துக்கலாம்
பார்த்தா முடி
போலிருக்கே..




ஹலோ... கலியாண
மண்டபம்
வாடகைக்கு
வேண்டுமா?




குழந்தையை இப்படித் தலைக்கு
மேலே தூக்கி வைச்சுண்டா
அது உருப்பட்ட மாதிரி தான்!

# விளம்பர 'விட்' (மேலும் சில!)

☆ கமல், ஜெயந்தி ☆




















# நீ யார்?

சந்திரநாத்

### 6

மகேஷ் போன பத்தாவது நிமிஷம், அவனுடைய அறையில் டெலிபோன் கூப்பிட்டது. நடேஷ் ரிசீவரை எடுத்து ''ஹலோ'' என்றான்.

''யார் பேசுகிறது?'' என்று ஒரு பெண் குரல் கேட்டது.

''யார் வேண்டும் உங்களுக்கு?''

''மகேஷ் இருக்கிறாரா?''

''எஸ். மகேஷ்தான் பேசறேன். என்ன விஷயம்?''

''ஜஸ்ட் எ மினிட்... யாரோ வர்றாங்க... டெலிபோனிலேயே இருங்க'' — எதிர் முனை மௌனத்தில் ஆழ்ந்தது. யாரோ 'டக்டக்' கென்று பூட்ஸால் நடக்கும் ஓசை கேட்டது. ஒரு நாய் குரைத்தது.

விநாடிகளை விநாடிகள் கடித்தன. திடீரென்று மீண்டும் போனில் தோன்றி ''ஹலோ'' என்றாள்.

''எஸ், மேடம், சொல்லுங்கள்.''

''மிஸ்டர், நான் பெரிய ஆபத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறேன். நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்.''

''நீங்கள் யார்? என்ன ஆபத்து உங்களுக்கு?''

''நான் ஒரு பெரிய பிலிம் டிஸ்டிரிப்யூட்டரின் மனைவி. நேரில்தான் எல்லாமே சொல்ல முடியும். வரட்டுமா?''

''பேஷாக வாருங்கள். உங்களைப் போன்றவர்களுக்கு உதவி பண்ணத்தானே நாங்கள் காத்துக் கொண்டிருக்கிறோம்.''

''ஸ்டேட் பாங்க் ரோடில்தானே இருக்கிறது உங்கள் ஆபீஸ்?''

''ஆமாம். 388 நம்பர். கீழே ஒரு காப்பி ஹோட்டல் இருக்கும். மேலே 'மகேஷ் அண்ட் நடேஷ்' போர்டு இருக்கும். கான்சர் — அஸ்டாராலஜி மாகஸின்களிலே, ராசிபலன் பகுதியிலே பார்த்திருக்கீங்களா — கான்ஸர் — நண்டு— அதுதான் எங்கள் எம்ப்ளம். போர்டுலே அதைப் பார்க்கலாம்.''

''தாங்க்ஸ். இதோ அரை மணியில் வருகிறேன். எல்லாம் நேரில் சொல்றேன். பத்து நிமிஷத்திலே நான் திரும்பிவிட வேண்டும். பர்தாவில் வருவேன்.''

''கோஷாவா, முஸ்லிமா — பெயர்?''



''முஸ்லிம் இல்லே. அடையாளம் காட்ட விரும்பவில்லே. என்பெயர் நிரஞ்சனி.''

''வெல்கம் மிஸ் நிரஞ்சனி.''

போனை வைத்துவிட்டு எழுந்து கோட் பாக்கெட்டுக்குள் கையை விட்டுக் கொண்டு ஜன்னலடியில் போய் நின்றான். இது யார் புது ஆசாமி? இது புது கேஸா? அல்லது பழைய கேஸின் தொடர்ச்சியா? டிஸ்ட்ரிபியூட்டர் மனைவி என்றானே கமலின் மனைவி யாக இருக்குமோ? அல்லது கமலின் சம்சாரம் என்று சொல்லிக் கொண்டு எவளாவது வருகிறாளோ — ஏன் வருகிறாள்?

மீண்டும் போன் கூப்பிட்டது. போய் எடுத்தான்.

''ஹலோ மகேஷ்'' பதற்றமான குரலில் அந்தப் பெண் அதிர்ந்தாள்.

''எஸ்'' — புரிந்து கொண்டான்.

''நான் வரமுடியலே, மகேஷ்! நான் வசமாகச் சிக்கிக் கொண்டு விட்டேன் சார். வெளியே இரண்டு முரடர்கள் காவல் நிக்கறாங்க. சார் — ஓ, நான் தொலைஞ்சேன்....'' அவள் விக்கி விக்கி அழ ஆரம்பித்துவிட்டாள்.

''மாடம், விஷயத்தை முதலில் சொல்லுங்கள்.''

''என்னை அவர்கள் கொன்றுவிடப் போகிறார்கள் — பெரிய பெட்டி, கத்திகள் எல்லாம் கொண்டு வந்து வைத்திருக்கிறார்கள். என்னைத் துண்டுத் துண்டாக வெட்டிப் பெட்டியில் பாக் பண்ணி, ரயிலில் போட்டுவிடப் போகிறார்கள்.''

''யாரு?''

''என் ஹஸ்பெண்டின் ஆட்கள்.''

''ஏன்?''

''என்னை அவருக்குப் பிடிக்கவில்லே —புது ஸ்நேகம் வந்திருக்கு — ஒரு படா

[illegible] கைக்குள் போய்விட்டார். என்னை விஷமாக வெறுக்கிறார். நான் இருப்பது இடைஞ்சலாக இருக்குது அவங்களுக்கு—''

''உங்களை எதற்காக அவர் கொல்ல நினைக்க வேண்டும்? சுலபமாக டைவர்ஸ் செய்து விட்டுவிடலாமே?''

''அப்படிச் செய்தால் அவருக்கு ஒரு லட்சம் ரூபாய் வராதே'' என்றாள் நிரஞ்சனி. ''எங்கள் இருவர் பெயரிலும் என் அம்மா எனக்குக் கொடுத்த பணம் ஒரு லட்சம் ரூபாய் பாங்கில் இருக்கிறது. இருவரில் யார் இறந்தாலும் முழுத் தொகையும் மற்றவருக்குக் கிடைத்துவிடும்.. மகேஷ்ஜி! உடனே நீங்கள் இங்கே வரவேண்டும்.''

''எங்கே?''

''பாலாஜிநகர்... நம்பர்—'' படீரென்று சத்தம் கேட்டது. ''ஐயோ— நான்...நான்'' என்று குரல் தடுமாறி, அடுத்த கணம் ரிசீவர் பொத்தென்று விழுந்த ஓசையும், அதைத் தொடர்ந்து யாரோ தடதடவென்று ஓடுவதும் கேட்டது.

ஓ, யாரோ நிரஞ்சனியை அதற்குள் தாக்கி வீழ்த்தி விட்டார்கள். நடேஷ் அவசரமாக அலமாரியில் தேடி, டவுன் மாப்பை எடுத்து மேஜை மீது விரித்து பார்வையை விரட்டினான். — பதினாறு இடங்களில் பாலாஜி நகர்கள் இருந்தன.

எக்ஸ்சேஞ்சைக் கூப்பிட்டு இப்போது தன்னோடு பேசிய நம்பரைக் கேட்டான். 'பப்ளிக் பூத்' என்று பதில் வந்தது.

திகைத்தான். ஒரு வீட்டுக்குள்ளிருந்தல்லவா நிரஞ்சனி பேசினாள். வாசலில் முரடர்கள் இருப்பதாகக்கூடச் சொன்னாளே. பப்ளிக் பூத்தில் அவளை அடித்து வீழ்த்த முடியுமா? அவள் சொன்னது பொய்யா? என்ன மர்மம் இது?

ஆனால் ஒன்று தெரிந்தது. அவள் பேசியது எந்த பாலாஜிநகர் பூத் என்பதைக் கண்டு கொள்ள முடிந்தது. திருவான்மியூர் பாலாஜி நகர்!

ஒரு ஆட்டோவைப் பிடித்துக்கொண்டு திருவான்மியூருக்கு விரைந்தான். திருவான்மியூரில் இரண்டே இரண்டு பப்ளிக் பூத்கள் தான் இருந்தன.

குளக்கரையிலிருந்த பஸ் ஸ்டாண்ட் பல்லவன் டிப்போவில் ஒரு ஆபீஸர் இருந்தார்.



அருள்வாக்கு

## ஆலயமும் தெய்விகக் கலைகளும்

இரண்டாயிரம் வருடங்களுக்கு முன் இந்தியாவுக்கு வந்த மெகஸ்தனிஸ் அப்போது நம் ஜனங்கள் எவ்வளவு உத்தமர்களாக வாழ்ந்தார்கள் என்பதைக் கூறியிருக்கிறான். ''இந்திய மக்களுக்குப் பொய்யே சொல்லத் தெரியாது; தெருவில் கிடக்கிற செல்வத்தைக்கூட எடுத்துச் செல்ல மாட்டார்கள்'' என்றெல்லாம் மெகஸ்தனிஸ் சொல்லியிருக்கிறான். அந்தக் காலத்து ஜனங்களின் மனசு மாதிரியே இப்போதும் இருக்கக் கூடாதா என்று ஆசையாக இருக்கிறது.

அன்றைக்கு அவர்கள் அவ்வளவு உயர்வாக இருந்ததற்குக் காரணம் என்ன? இன்று நாம் இவ்வளவு தாழ்ந்து போய்விட்டதற்குக் காரணம் என்ன? அந்த அந்தக் காலத்தின் சூழ்நிலையே அந்த அந்த மனப்பான்மைக்கும் காரணமாக இருக்கிறது. பழங்காலத்தில் பொதுஜனங்கள் எல்லாரும் கோவிலுக்குப் போனார்கள். அங்கே அவர்களுக்கு நல்வழி கூறுவதற்காக மகாபாரதம் முதலிய சத் கதைகள் நடைபெற்றன. இதற்காகவே ராஜாங்கத்தில் மானியம் தரப்பட்டு வந்தது. நாடகம், கூத்து எல்லாம் கூடத் தெய்வ சம்பந்தமாகவே இருந்தன. தங்கள் தொழிலைச் செய்வது, ஆலய தரிசனம், சத் கதை சிரவணம் இவற்றுக்கே மக்களின் பொழுது சரியாக இருந்தது. இதனால் யோக்கியர்களாகவே இருந்தார்கள். இப்போது ஜனங்களைக் கவர்ந்திழுப்பதற்கு என்ன என்னவோ ஆபத்துகள் எல்லாம் வந்துவிட்டன. தர்மத்துக்கு விரோதமான படக் காட்சிகள், கதைப் புத்தகங்கள் எல்லாம் அதிகமாகி விட்டன. ஜனங்கள் இதற்கிடையில் தத்தளித்துக் கொண்டிருக்கும்போது பலவிதமான அரசியல் கட்சிகள் வேறு அவர்கள் புத்தியைக் கலக்கிக்கொண்டிருக்கின்றன. எங்கேயும் சஞ்சலம், அதிருப்தி யோக்கியதைக் குறைவு இவை அதிகரித்து விட்டன.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்



# திருமகள் திருமணத் திட்டம்
# ஓர் இலட்சியத் திட்டம்
# உங்கள் வாழ்க்கையின்
# இலட்சியத்தை
# நிறைவேற்றிடுவீர்.

''சிறுமியாக உலவி வரும்
உங்களது செல்வ மகள்
மணமகளாக அமர வேண்டிய
நாள் வெகுதூரத்தில் இல்லை.
அவளது திருமணத்தை, அவளது
மனதுக்கேற்ப சிறப்பாக நடத்த
வேண்டியது உங்கள் கடமை
யல்லவா? அதுதானே உங்கள்
கனவும் மகிழ்ச்சியும் கூட.''

உங்களது கனவை நினைவாக்கி
மகிழ்ச்சியளிக்கும், எங்களது
திருமகள் திருமணத்திட்டம்!
திட்டம் எளிது! பலனோ அரிது!!

விபரங்களுக்கு எங்களது கிளை
ஒன்றுடன் தொடர்பு கொள்ளுங்கள்:-
தமிழகம், ஆந்திரம், கர்நாடகம்,
மகாராட்டிரம், மேற்கு வங்காளம்,
மற்றும் கேரள மாநிலங்களில் கிளைகள்.



**கரூர் வைஸ்யா பாங்க் லிட்..**

பதிவு அலுவலகம்: கரூர், தமிழ்நாடு.

K.V. ராகவாச்சாரி,
சேர்மன்



அவருக்கு எதிரேதான் டெலிபோன் பூத். ஆகவே அவர் கவனித்திருக்கக் கூடும்.

கேட்டான். 'கடந்த ஒரு மணி நேரத்தில் அதில் யாருமே பேசவில்லே' என்று தீர்மானமாக, 'சும்மாச் சும்மா கேட்காதேய்யா' என்று அதட்டுகிற குரலில் சொன்னார். பூத்தைப் போய்ப் பார்த்தான். அது ரிப்பேராகிக் கிடந்தது.

இன்னொரு பூத்தில் நடேஷ் போனபோது யாரோ பேசிக் கொண்டிருந்தார்கள். வயதான ஆசாமி. அவரை விசாரித்தான். ''நான் யாரையும் பார்க்கலேயே!''

எதிரே ஒரு இளநீர்க் கடை இருந்தது. கடைக்காரன் சாக்கை விரித்துப் போட்டுக் கொண்டு படுத்திருந்தான். கறுப்புக் கம்பளி போர்த்தியிருந்தான்.

இரண்டு நாட்களாக ஜுரமாம். நேற்றெல்லாம் வரவில்லேயாம். நம்பியிருக்கிற நாலு ஜீவன்களுக்காக இன்று வந்தானும்.

''காலேலேர்ந்தே யார் யாரோ வந்துகினு, போய்க்கினு இருந்தாங்க சாமி — நான் கண்டுக்கல்லே, சாமி'' என்றான்.

நடேஷுக்கு ஏமாற்றமாக இருந்தது. பக்கத்தில் உள்ள வீடுகளில் விசாரித்தான். நிரஞ்சனி, கமல்னு யாரும் கிடையாது என்றார்கள்.

காலி வீடு ஏதாவது இருக்கிறதா— ஆராய்ந்தான். 4வது தெருவில் ஒரு வீடு இருப்பது தெரிந்தது. அங்கே போனான். திண்ணையில் ஒரு சாக்கை மறைப்புக் கட்டிக் கொண்டு ஒரு குடியானவப் பெண் சோறுக்கிக்கொண்டிருந்தாள்.

''இந்த வூடு பின்னாலே எல்லாம் பாளடைஞ்சு கிடக்குதுங்க. எனக்குத் தெரிஞ்சு ஆறு வருஷமா யாருமே குடியில்லிங்க'' என்றாள்.

ஆனால் ஒரு தகவலை அவள் எதிர்பாராமல் சொன்னாள். சற்று முன்பு ஒரு டாக்ஸி வந்து அந்த வீட்டின் முன் நின்றதாம். அதில் ஒரு பெண்ணும் ஒரு புஸ்தி மீசைக்காரனும் இருந்தார்களாம். பெண் கறுப்புக் கண்ணாடி போட்டுக்கிட்டு இருந்தாளாம்.

டிரைவர் கீழே இறங்கி 'பானெட்டைத் திறந்து ஏதோ ரிப்பேர் செய்துவிட்டு வண்டியைக் கிளப்பினானும்.'

''அந்தப் பொம்பளை எப்படி இருந்தா?'' நடேஷ் கேட்டான்.

''நல்லா அழகா இருந்தாங்க... வெள்ளைச் சேலை கட்டிக்கிட்டிருந்தா; வெள்ளை ஜாக்கெட் போட்டுக்கிட்டிருந்தா...''

''முஸ்லிம் பொம்பளையா?''

''இல்லிங்க... நம் 'தமிழாளுங்கதாங்க.''

''தலையிலே முக்காடு இருந்துச்சா?''

''புடவைத் தலைப்பைத் தலையிலே போட்டுக்கிட்டிருந்தாங்க. ஆனா முகமூடி இல்லிங்க. நல்லா மூஞ்சியே சொல்லிச்சே—''

''அம்மைத் தழும்பு இருந்துச்சா?''

''அய்ய.... பேசப்படாது — சுத்தமா இருந்துச்சுங்க.''

''அந்த வண்டி நம்பர் பார்த்தியா?''

''இல்லிங்க. நமக்கு எழுதப் படிக்கத் தெரியாதுங்க'' நாணினாள்.

''அந்தக் கார் எப்படிப் போயிற்று?''

''அதா'' — அந்தப் பக்கம்'' — அடையாறு ரோட்டைக் காட்டினாள். ஆட்டோவை அடையாறுக்கு விரட்டினான்.

டாக்ஸி ஸ்டாண்டில் ஒரு டிரைவர் சொன்னான்: ''ஆமாங்க — ஒரு வெள்ளைப் புடவைக்காரியும் மீசைக்காரனும் வந்தாங்க. இங்கேதான் பஸ் ஏறிப் போனாங்க.''

''எந்த டாக்ஸியில் வந்தாங்க?''

''டாக்ஸியில் வரலேங்க. நடந்துதான் வந்தாங்க. ஒருவேளை தூரத்திலேயே நிறுத்தி இறங்கிக்கிட்டு வந்தாங்களோ என்னமோ?''

''எந்த பஸ்ஸில் ஏறினார்கள்?''

''பைன்-ஸி!''

''ஓ, பைன்-ஸி — கே. கே. நகர் போகிற வண்டி. திருப்பு கே. கே. நகருக்கு'' என்று ஆட்டோவுக்கு உத்தரவிட்டான் நடேஷ்.

'நிரஞ்சனி! என்னையா ஏமாற்றப் பார்க்கிறாய்? உன் பாச்சா நம்ப கிட்டப் பலிக்காது மேடம்! உன்னை இன்னும் அரை மணி நேரத்திலே கண்டு பிடித்து என் முன் நிறுத்திக் கொள்ளாவிட்டால் நான் நடேஷ் இல்லே!'

காந்தி மண்டபமும், மான்கள் சரணாலயமும், கிண்டியும், தொழிற்பேட்டையும் ஈகாட்டுத்தாங்கலும் சிட்டாய்ப் பின்னால் பறந்து மறைந்தன.

போட் தொழிற்சாலையைத் தாண்டிக் கடந்து தாம்போதியில் இறங்கி, ஜாபர்கான் பேட்டையில் ஏறி வட்டத் தொட்டியில் இரும்பினார்கள்.

பஸ் டெர்மினஸில் கணக்குத் தீர்த்து இறங்கிக் கொண்டான். கர்ச்சிப்பைத் தலையில் கட்டிக் கொண்டான். கூலிங் கிளாஸைத் தரித்தான்.

ஒவ்வொரு தெருவாகத் தேடத் தொடங்கினான்.

(தொடரும்)

# பன்னீர் புஷ்பங்கள்

கைநிறைய ரீலை வைத்துக் கொண்டு கதை சொன்ன காலம் மலையேறிவிட்டது. மெலிசான கதையமைப்புக்கு வித்தியாசமான ட்ரீட்மெண்ட் தருவது இன்று மாறிவரும் ட்ரெண்ட். இந்த வகையில் பாலைவனச் சோலைக்குப் பின் பன்னீர் புஷ்பங்கள்.

முழுக்க முழுக்கப் பள்ளி மாணவர்கள் கதை. தன் பள்ளிக்குப் புதிதாய் வந்து சேரும் உமாவுடன் (புது முகம் சாந்தி) நட்புக் கொள்கிறான் பிரபு (சுரேஷ்) — ஒரு சின்ன உரசலுக்குப் பின். பிரபுவைச் சுயமாய்ச் சிந்திக்க விடாமல் அவ்வப்போது ஆபாரமான யோசனைகள் சொல்லி உமாவை வளைக்கத் தோழர் குழாம் உதவுகிறது. கூட வரும் பப்பாவுடன், மனோஹரும் — ஷியாம் சுந்தரும் அசத்துகிறார்கள்.

சலனமில்லாத நட்பில் விரிசல் விழக் காரணமாகிறார் இடையில் உட்புகும் புது ஆசிரியர் — பிரதாப். ஆசிரியர் முறையில் உமாவுடன் நெருங்கிப் பழக பிரபுவுக்கு 'கன்னா பின்னா' சந்தேகங்கள் முளைத்து முரடனாய் மாறி, கெட்ட பெயர் சம்பாதிக்கிறான். அறிவுரைக்குப் பின் நல்லவனாகிறான். மறுபடியும் வரும் எதிர்ப்பைச் சமாளிக்க, நண்பர்கள் எல்லாம் சேர்ந்து 'உமா — பிரபு' ஜோடியுடன் 'FRIENDS' பாணியில் ஓடுகிறார்கள்.

ஆங்கிலப் படம் அளவுக்கு இருக்க வேண்டிய படத்தைக் காலைவாருகிறது ஒளிப் பதிவு. அழகான லொகேஷன்கள் இருந்தும் தெளிவு இல்லாத கேமரா. பாடலுக்குப் பாடல் நெஞ்சம், — கொஞ்சம், ராகம் — மேகம், தாளம் — கீதம் என்று எழுதிப் போரடிக்கிறார். கங்கை அமரன். இசையை இளையராஜாவிடம் விட்டதனால் தப்பித்தோம்.

பைலா பாடல், ஆட்டம் பாட்டம் ஏதும் இல்லாமல் கிட்டாரை மீட்டிக் கொண்டு ஒரு இழவைப் பாடலைப் பாடி 'பிக்னிக் மூடை'யே அவுட்டாக்குகிறார்கள்.

போதும் என்கிற அளவு நடிப்புடன் அழகாய் வருகிறார்கள் புது முகங்கள் சுரேஷும் சாந்தியும்.

'ராஜ பார்வை' பாரதி - வாசுவும்' 'அவள் அப்படித்தான்' சோமசுந்தரேஷ்வரும் சேர்ந்த இந்த டீமிற்கு அடுத்த முறையாவது வெற்றி கிட்டட்டும்.

—'சிந்து-ஜீவா'



எதிர்பார்க்கவேயில்லே.

ஷாக். ஹாரிபிள் ஷாக். தலேக்கு மேல் குண்டுப் போட்டவள் மாயா. போட்டுவிட்டுச் சிரித்தாள். வெள்ளேயாய்ச் சிரித்தாள். போட்டது குண்டு என்று தெரியாமல்... முகம் மலர அகம் குளிர... மார்பு பூரிக்க...

மாயா சிரித்தாள். அவன் விழித்தான்.

''மாயா... என்ன சொல்றே?''

பதறிப்போனுன். மகா சீரியஸாய்க் கேட்டான்.

''ஞான் சத்யம் பறையுன்னு'' சந்தோஷமாய் அணேத்துக் கொண்டாள். புரு மார்பு. ஸ்பரிசம் ரசிக்கவில்லே. அவளே விலக்கிஞன்.

''எந்துவா?'' என்ருள். குழம்பியபோது.. அவன் சுத்தமாய்த் தெளிந்தான். வலிய அவளே நெருங்கி, செல்லமாய் வயிற்றைத் தடவி ''நம்ம வாரிசு! என் சாதனே!'' என்ருன். சிரித்து வை(த்)தான்.

மாயா உண்டாகியிருக்கிருள். அவள் வயிற்றில் என் கரு விஷயம் முற்றிவிட்டது. இந்நிலே நீடிக்கக் கூடாது. நீடிக்க விடக் கூடாது. நீடித்தால்....

மனசில் ஷர்மிளி வந்து நின்ருள். விரலால் முடியை அலட்சியமாகக் கோதி விசிலுடன் கண்ணடிக்க... ஷர்மிலி. அவளேப்போல ஒரு பெண் கலியுகத்தில் அபூர்வம். செக்ஸியான விழிகள். உதடுகளில் லாகிரி. கூர்மையான அழகான நாசி. வெடுக்கென்று கடிக்க ஆசை வரும்.

ஷர்மிலி! அவளோடு ஒப்பு நோக்கிஞல் மாயா 'சுழி'. சுத்தமான 'ஸீரோ'. பெரிய யானே முட்டை! திரண்ட மார்பும், திரண்ட சொத்தும் ஷர்மிலி கவர்ச்சியை இன்னும் அதிகரிக்க, அவன் கிரங்கித்தான் போனுன்.

முயற்சிகள்... முயற்சிகள்...

கண்ணுடி முன் அதிக நேரம் நின்ருன் — அவளுக்காக.

கல்லூரி வாசலில் நிறையத் தவம் கிடந்தான் — அவளுக்காக.

மெல்ல, மெல்லமுயன்று, பரிச்சயப்பட்டு, நெருங்கி, சிரித்து, 'ஏ' ஜோக்கடித்து, சிரித்து, சிரிக்க வைத்து, அவள் சிரிக்கும்போது குலுங்கல்களே இரசித்து...

—ஸாரி மாயா! எங்க அப்பா பத்தி உனக்கு தெரியாது. நம்ம காதலேப் பத்திச் சொன்னு அவர் குதி குதின்னு குதிக்கிருர். என் அந்தஸ்தென்ன, அதென்ன, இதென்னன்னு... ஹி இஸ் எ ஹார்ட் பேஷண்ட் யூ நோ? இந்நிலேயில் அவருக்கு ஷாக் குடுக்கிறது...

குரல் கம்மப் பேச வேண்டும். கொஞ்சம் அழவேண்டும்.

ஜெம்பு முன் நிறைய ஒத்திகை பார்த்துக் கொண்டான். அதிர்ச்சி தரப் போவதாய் எண்ணிப் போனவன், அதிர்ச்சியை வாங்கிக் கொண்டு வந்து சே(ா)ர்ந்தான்.

''நிங்ஙள்க்கு எந்தாணு வேண்டது மோனே மோளோ?''

மாயா கண் மின்னக் கேட்டாள். அந்த ஆர்வப் பளபளப்பின் அழகு.... ம்ஹூம்! அது அழகாகவே இல்லே. ஷர்மிலியின் முன் இவள் எந்த மூலே?

''இப்பவே என்ன அதைப் பத்தி? இவ்வளவு நல்ல நியூஸ் சொல்லியிருக்கே. ஐ ஷூட் செலிப்ரேட் இஸ்'' என்ருன். உதட்டில் அழுத்தமாய் முத்தமிட்டான். ''இது ஜூனியருக்கு'' என்று மீண்டும் முத்தமிட்டான். அவள் சிவந்து துடைத்துக் கொண்டபடி, ''ஜூனியரின்டெ அம்மைக்கு?'' என்று சிரிக்க....

'பேர'ரிடம் ஐஸ்கிரீம் சொன்னுன். வந்தது. வழக்கத்தை விட இனிப்பாய் அவள் உணர்ந்தாள். வழக்கத்தை விடக் கசப்பாய் அவன் உணர்ந்தான்.

பிரிந்தபோது—

''ஜூனியர் பத்திரம்!'' என்ருன். சிரித்—தான், தாள், தார்கள்!

# ஒரு சிறுக



ஓவியர் திரு மணியம் செல்வனிடம் ஒரு கேள்வி:

இந்தக் கதையிலே உங்களுக்கு மிகவும் பிடித்தமான அம்சம் :

- தலேப்பு
- நடை
- முடிவு
- குண சித்திரம்

# இரு பறவைகள்

அன்றிரவு அவன் நிறையக் குழம்பினான். மண்டையை உடைத்துக் கொண்டு யோசித்தான். புரண்டான், எழுந்தான், நடந்தான். நின்றான். யோசனையாய்த் திரும்பி வந்தான். படுத்தான், எழுந்து தண்ணீர் குடித்துப் படுத்தான். புரண்டான்...

உறக்கம் வராத ராத்திரி. மூளையில் குடைசல்.

இப்ப என்ன பண்ண? பெரிய பூகம்பம்? காலடியில் 'சரசர'வென்று பூமி சரிந்த மாதிரி மூளையிலேயே இன்னி எறிந்துவிட வேண்டும். இல்லாவிட்டால் ஷர்மிளியை நழுவ விட்டு விட முடியாது. ஷர்மிளி ஒரு தேவதை. பணங் காய்ச்சி மரம். ஏராளமான உடம்பு. ஏராளமாய்ப் பணம். அதை அவன் மட்டுமே அனுபவிக்க வேண்டும். அதற்கான எந்த விபரீதத்தையும் அவன் சந்திக்கத் தயார்.

மாயாவைக் கொன்றுவிட வேண்டும்... மாயாவைக் கொன்றுவிட வேண்டும்.. மாயாவைக்கொன்றுவிட வேண்டும்... எப்படி?

சட்டென்று அவன் நினைவுக்கு வந்தது சாமியார் பாறை!

கீழே இருந்து பார்த்தால் மேலேலே உச்சி வழுக்கையாய் ஒரு பாறை. பருத்திக் குன்றுக்குப் பக்கத்தில் ஷர்மிளியின் உடம்பு மாதிரி ஏகச் செழிப்பான பிரதேசம். அவளை நினைத்தாலும் அந்தப் பாறையை நினைத்தாலும் பச்சையான எண்ணப் பிரசவங்களே!

சின்னச் சின்ன முயல்களும், நரிகளுமான மலை. சூரியன் உள்ளே நுழைய அனுமதி பெறவேண்டும். எப்போதும் குளுமை. மாயாவுடன் இறுக்கமாய், நெருக்கமாய், உடல் சூடுகளை ரசித்தபடி நடந்து போயிருக்கிறான். மணிக் கணக்காய் உயரே நடந்துபோய் உச்சியை எட்டிப் .பிடித்தார்கள். அந்தப் பாறையை அவனுக்கு அறிமுகம் செய்து வைத்ததே மாயாதான். பயமாய், பலமான ஆதாரத்துடன் அவன் அன்று கீழே பார்த்தபோது-

ஓ!... என்ன பயங்கரம்! தலை கிறுகிறு வென்று சுற்றியது. தன்னை அறியாமலேயே பிடி நழுவிக் கீழே விழுந்துவிடுவோமோ என்று அவன் பயந்து போனான்.

''கொள்ளாம்! இதக்காணுன் இத்தர பேடியோ?''





# சூடாமணி சூடுகிறார்

**இ**ந்த வருடம் சங்கீத சூடாமணி விருது எம். சந்திரசேகரனுக்கு கிருஷ்ணகான சபையினரால் வழங்கப்பட இருக்கிறது. குறிப்பாக இந்த ஆண்டு அவரைத் தேர்ந்தெடுத்ததில் ஏதேனும் காரணம் இருக்கிறதா?

''நீங்கள் கேட்பதன் அர்த்தம் புரிகிறது. நிச்சயமாக ஐம்பது வயதைத் தாண்டிவிட்டேன் என்பதற்காக இல்லை. என்னுடைய வாசிப்புக்கும் கலைத் திறமைக்காகவும்தான் இந்த விருதை அளிக்கிறார்கள். மேலும் விருது வழங்குவது எனக்குப் புதிது அல்லவே?'' என்று சற்று அழுத்தமாகவே சொல்கிறார் எம். சந்திரசேகரன். (1975ல் திரு டி. வி. சங்கரநாராயணனுடன் வெளிநாடு சென்றபோது கூட, 'வாத்ய ரத்னாகர' என்ற பட்டம் யு. எஸ். ஸில் வாங்கியிருக்கிறார்.)

''பிரபல வித்வான்களுக்குத் துணையாகவும் வாசிக்கிறீர்கள். தனிக் கச்சேரியும் செய்து வருகிறீர்கள். எதில் அதிக திருப்தி?''

''இரண்டும்தான். பாட்டுக் கச்சேரிகளுக்கு இணையாக வாசிக்கும்போது ஏற்படுகிற திருப்தி அலாதி. நம்மைப் பல வித்வான்கள் விரும்பி வாசிக்கச் சொல்லிக் கேட்கிறார்கள் என்பதில் ஒரு தனி மகிழ்ச்சி இருக்கிறதே! தனியாக வயலின் வாசிக்கும்போதும் நான் கூடவே மெல்லப் பாடிக் கொண்டிருப்பதைக் கவனித்திருக்கலாம். வாய்ப் பாட்டு, கச்சேரி முழுமை பெற உதவுகிறது.''

''சினிமாவினால் கர்நாடக சங்கீதத்துக்குப் பாதிப்பு உண்டா?''

''இல்லை. அது வேறு இது வேறு. ஆனால் சினிமா சக்தி வாய்ந்த மீடியம். உதாரணமாக 'ப்ரோ சேவா' கீர்த்தனையை எடுத்துக்கொள்ளுங்கள். ரொம்ப வருஷத்துக்கு முன் எம். எஸ். பாடிப் பிரபலப்படுத்தினார். இப்போது 'சங்கராபரணம்' சினிமாவில் அந்தப் பாட்டு மறுபடி அதிக பாபுலர் ஆகிவிட்டதை மறுக்க முடியாதே?''

''உங்களால் மறக்க முடியாத நிகழ்ச்சி ஏதாவது உண்டா?

''25 வருஷம் முன்னால் கொட்டூர் (திருவாரூர் பக்கம்) கிராமத்தில் தனிக் கச்சேரி செய்தேன். அதில் கதன குதூகலம் ராகம் வாசித்தேன். திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை, பாடி முடித்த பிறகு, என் கையைத் தடவிக் கொடுத்து, 'இந்தக் கை இன்னும் எவ்வளவு வாசிக்கப் போகிறதோ' என்று சொல்லிப் பாராட்டினார். நிறையப் பேர் பாராட்டியிருக்கிறார்கள். ஆனால் இதை என்னால் மறக்கவே முடியாது!''

பிரெய்லி முறை மூலம் பல மொழிகள் படிக்கக் கற்றுக்கொண்டுள்ள இவர் உற்சாகமாகப் பேசுகிறார். தமக்காகத் தம் வாழ்வையே தியாகம் செய்தவரும், வயலினுக்குக் குருவும் — தமது அம்மாதான் என்று நெகிழ்ந்து சொல்கிறார். தாயார் சாருபாலா சங்கீத பரம்பரையில் தோன்றியவர். வயலின் மேதை டி. கே. ஜெயராம அய்யரைக் குருவாகப் பெற்றவர். அண்மைக் காலமாக சந்திரசேகரின் மகள் பாரதியும் (பி.எஸ்ஸி. பட்டம் பெற்றவர்) கூட வாசிக்கிறார். பின்னைகள் மிருதங்கம் கற்றுக் கொள்கிறார்கள்!

—பேட்டி : தமயந்தி, சாருகேசி

என அவள் சிரித்தாள். கேரளப் பெண்களுக்கே தைரியம் ஜாஸ்திதான்.

சாமியார் பாறை.' நல்ல இடம். ஆள் நடமாட்டம் இல்லாத பகுதி. இந்நிலையில் காரியம் சாதிப்பது சுலபம். மிகச் சுலபம்.

விசிலடித்தான். நிம்மதியாய்ப் படுத்தான். காலை விழித்தபோது சூரியன் முறைத்திருந்தான். இவன் கொட்டாவி விட்டு மாயாவின் ஹாஸ்டலுக்குப் போன் பண்ணினான்.

மாயா ஆச்சரியப்பட்டாள். ''பிக்னிக்கோ? இப்பொழுதேவோ?'' என்றாள்.

நிறையப் பேசிச் சம்மதிக்க வைத்தான். பின் மானேஜரின் வீட்டு முகவரிக்கு ஃபோன் பண்ணி அழுதான். ''பாட்டி... பாட்டி... போயிட்டாங்க சார்!'' என்று மீண்டும் அழுதான்.

**மி**கச் சரியாய் அவள் சிவப்பு 'லொட லொட' ஹைதர் காலத்து பஸ்ஸில் வந்து இறங்கினாள். கவிழ்த்துக் கண்டக்டர் மணியடிக்க பஸ் ஜலதோஷச் சத்தங்களுடன் ஜன்னி கண்ட மாதிரி தூக்கித் தூக்கிப் போட்டுப் போனது.

கையை ஆட்டி வந்தாள். மிக அழகாய் லோ-ஹிப் உடுத்தி, மிக அழகாய் அலங்கரித்திருந்தாள்! கடைசி அலங்காரம்! அவன் சிரித்தான். அவன் முயன்றபோது

உதடு கோணிக் கொண்டது. பயம், பரபரப்பு எப்படிச் சமாளிக்கப்போகிறோம் என்ற திகில்.

கற்றாழைப் புதரில் சலசலப்புகள். ஒரு ஓணான் தலை உயர்த்திப் பார்த்தது. வேறு சப்தமில்லை. மலை வந்து விட்டது. அவர்கள் ஏறினார்கள். ஆனால் பேசிக் கொள்ளவில்லை.

அவளின் இந்த மௌனம் அதிசயம்.

அவனுக்குப் புரியவில்லை. என்ன ஆகி விட்டது இவனுக்கு? ஏன் இப்படி எதையோ பறிகொடுத்த மாதிரி இருக்கிறான்?

மாயா தான் நெடுகப் பேசினாள். 'எத்தர சௌந்தர்யம்!' என வியந்து கொண்டே வந்தாள். குதிரைப் பாய்ச்சலாய் ஒரு ஓடையில் தண்ணீர் ஓடிற்று. உள்ளங்கைக் குழிமையை அனுபவித்தபடி அந்த அந்த நீரின் இனிமையை ரசனையுடன் குடித்தாள்.

அவள் செயல்களைப் பார்க்கப் பார்க்க அந்த மனசின் வெள்ளையில் இவன் பலவீனப் பட்டான். காதுக்குள் ஒரு குரல் 'இது நியாயமா! நியாயமா?' என்று துவங்கிவிட்டது. பிடிவாதமாய் அவன் ஷர்மிலியைப் புகுத்திக் கொண்டான்.

''அச்சண்ட்ட சோதிச்சோ? நம்மட விவாகம் பற்றி எந்தானு பறஞ்ஞு?''

''அவரென்ன சொல்றது? அவர் சம்மதிக்காவிட்டாலும் நம்ம கல்யாணம் ஒண்ணும் நின்னுடாது. மாயா!'' சொல்லும்போது குரல் நடுங்கிற்று. முகம் வெளிறிற்று.

**சா**மியார்ப் பாறை நெருங்கிவிட்டது. அவள் முடிவு நெருங்கி விட்டது. விடுதலை இனி எனக்கு விடுதலை. நான் இனி சுதந்திர புருஷன். எனக்கும் மாயாவுக்கும் சம்பந்தமே இல்லை. பிறகென்ன, ஷர்மிலி!...

''எனக்கு நடக்கான் கழியுன்னில்லா.'' மாயா உட்கார்ந்து விட்டாள், கால்களை லேசாய் அமுக்கி விட்டுக் கொண்டு.

''நான் வேணாப் பிடிச்சு விடட்டுமா?''

சிவந்தாள், சிரித்தாள். விலக்கவில்லை. அவன் கன்னத்தில் மூக்கை அழுத்திப் புதைத்து முகர்ந்தாள்.

''சாமியார்ப் பாறைக்குப் போகலாமா?''

''...ச்.... எனக்கு இஷ்டமில்லா. இங்ஙனே நமக்குத் இரிக்கப் போகாம்'' என்றாள். அவனுக்குப் பகீர் என்றது.

''என்ன இது? இவ்வளவு தூரம் வந்துட்டு அதைப் பார்க்காமல் எப்படித் திரும்பறது? டயர்டா இருந்தா கொஞ்சம் கழிச்சுப் போலாம்.''

அவள் மீண்டும் எழுந்தபோது அவன் அவளை அணைத்தபடி கூட்டிப் போனான். பாறையை நெருங்கினார்கள்.

**சா**மியார் பாறை—

கீழே மரங்களும், மற்ற பாறைகளும் நேற்றுப் பிறந்த குழந்தை மாதிரி சிறியதாய், மிகப் புதிசாய்த் தெரிந்தன..

''அந்தோ ஒரு ஓடை தெரியுது பாத்தியா? அதுக்குப் பக்கத்திலே ஒரு எறும்பு போறது பார்!''

''ஓ!'' என மாயா வியப்பைச் சொன்னாள்.

மாயா, என்னை மன்னித்து விடு!

''உனக்குத்தான் இந்த சீனரி பிடிக்குமே நல்லாக் குனிஞ்சு பார்....''

அவள் குனிந்தாள். அவன் சர்வ நிச்சயமானான். நெஞ்சில் வன்மம். போ சனியனே! என் காலைச் சுற்றிய பாம்பே! ஒழிந்து போ! கண் காணாத இடத்துக்குப் போய்ச் சேர்!...

வெறியுடன் பாய்ந்து நெருங்கி அவளைத் தள்ளப் போனபோது—

சடாரென்று விலகினாள். முற்றிலும் ஆதாரமே இல்லாமல் அவன் திக்குமுக்காடிப் போனான். சமாளிக்க முடியவில்லை. அப்படியே நிலைகுலைந்து. குப்புறக் கவிழ்ந்தான்.

பின்னாலேயே அவள் அலறலும் கண்ணீரும் கூட வந்தன. கல்லையும் மரங்களும் பெரிதாகிக் கொண்டே வர... அவன் கீழே — இன்னும் கீழே இறங்கினான். இறங்கிக் கொண்டே இருந்தான். எமன் பூமியிலிருந்து மேலே பார்த்துச் சிரித்தபடி அவனை வரவேற்கக் காத்திருக்க...

''என்னை மன்னித்துவிடு. டியர்! முதலிலேயே உன் திட்டம் புரிந்து போயிற்று. என்றாலும் எனக்கு உன் மேல் கோபம் இல்லை. நானும் ஜூனியரும் இனி உன் நினைவிலேயே வாழ்வோம்!'' என்று...

—அவள்.... மலையாளத்தில்...

கத்தினது.... கத்தினது....

எதிரொலித்தது.... எதிரொலித்தது...

---

**கல்கி** அடுத்த இதழ் சினிமா சிறப்பிதழ்

எழுதுவது யார்? போட்டி முடிவு

முழு நீள நாவல்:

# மௌலி

எழுதுகிறார்



*

---

# சுகாசினிக்குக் கிடைத்த பிராபல்யம்!



கடுகு பதில்கள்

✻ ஏ. எம். பழனிசாமி, கோவை-18

கே. விண்வெளி பயணத்திற்காகப் பல கோடி செலவிடும் மத்திய அரசு, அன்றாடம் பயண வசதிக்காக இரயில்வே துறையைச் சிறப்பாக அமைக்க முனைந்தால் என்ன?

ப: ரயில்வே துறைக்குப் பல கோடி செலவு செய்தால், பஸ் போக்குவரத்தைச் சிறப்பாக்கச் செலவு செய்யக் கூடாதா என்பீர்கள். கிராமங்களில் குடி தண்ணீர் வசதி தரக்கூடாதா என்பீர்கள். ஆஸ்பத்திரிகளை நிறைய அமைக்கலாமே என்பீர்கள். இலவசக் கல்வி தந்தால் என்ன என்பீர்கள். ஆகவே எல்லாத் துறையிலும் அரசு கவனம் செலுத்த வேண்டும். அதில் ஒன்று விண்வெளி.

✻ எஸ். வி. ராஜசேகர், சென்னை-5

கே. நீங்கள் நின்றுகொண்டே தூங்கிவிடுவீர்களாமே?

ப: யானையைப் போல் பலமும், கம்பீரமும் அறிவும், ஞாபக சக்தியும் இருப்பதால் நானும் யானையைப் போல் தூங்குவேன் என்று நினைக்க வேண்டாம், ஸ்வாமி!

✻ என். மார்க்கபந்து, காட்பாடி

கே. நம் நாட்டில் வசதிகள் இருந்தால், விஞ்ஞானம், தொழில், விளையாட்டு ஆகிய துறைகளில் நாம் முன்னேறிவிடலாம் என்கிறேன்?

ப: எல்லாத் துறைகளுக்கும் வசதிகள் இருந்துதான் ஆகவேண்டும் என்பதில்லை. உதாரணமாக ஓட்டப் பந்தயத்தில் நாம் ஏன் ஒலிம்பிக்கில் தங்கப் பதக்கம் பெறக் கூடாது? என்ன வசதி தேவை, தேர்ச்சி அடைவதற்கு? இரண்டு கால், ஒரு மைதானம் — போதுமல்லவா? வசதிகள் இல்லை என்ற மனப்பான்மையே நமக்கு மனத் தளர்ச்சியை அளிக்கிறது.




✻ எஸ். சந்திரா, பாண்டிச்சேரி

கே. சுஹாசினிக்கு நிறையப் பிராபல்யம் கிடைத்து விட்டதே?

ப: அரசியல்வாதிகள் மூலம் கிடைக்கும் பிராபல்யத்தைக் கண்டு பெருமைப்பட முடியாது. பார்க்கப் போனால், அவருக்கு ஏற்கனவே கிடைத்திருக்கும் பெயருக்கும் புகழுக்கும் சிறிதளவு மாசுதான் ஏற்பட்டிருக்கிறது என்பேன். சுஹாசினியின் பெயர் இந்தச் சிக்கலில் அதிகம் மாட்டிக் கொள்ளாமல் பிழைப்பதாக!

✻ ஆ. சுப்பிரமணியன், அம்பாசமுத்திரம்

கே. என்னை ஒரு பெண் விரும்புகிறாளா என்பதைத் தெரிந்து கொள்ள வழி கூற இயலுமா?

ப: ஓ! 'கன்னத்தில் ஒன்று கொடு' என்று கேளுங்கள். எந்த மாதிரி எது கிடைக்கிறது என்பதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

✻ மேஜர் தாசன், ஈரோடு-10

கே. நான் கடுகு தாசனாக மாறினால் எப்படி இருக்கும்?

ப: கோடானு கோடி கடுகு தாசர்களில் ஒருவராகிப் போவீர்கள்!




✻ வெ. பாலசந்திரன், கல்கத்தா-26

கே. ஸ்ரீதேவியின் மார்க்கெட் இறங்கக் காரணம் மாதவியா?

ப: இந்த 'தவி' அந்த 'தேவி'யை ஒன்றும் செய்ய முடியாது. ஸ்ரீதேவியிடம் உள்ள குழந்தைத்தனமான அழகு, நடிப்பு மாதவியிடம் இல்லை என்று எனக்குப் படுகிறது.

✻ எம். தாமஸ், உத்திரமேரூர்

கே. ஓசியில் புத்தகம் வாங்குவது சாலச் சிறந்தது என்கிறீர். அப்படி இருந்தால் கல்கி சர்க்குலேஷன் எப்படி அதிகம் ஆகும்?

ப: தாமஸ் அண்ணே! நான் சொன்னது புத்தகங்களைப் பற்றி. பத்திரிகைகளைப் பற்றி அல்ல! 'கல்கி'யைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பதால் ஒன்று சொல்கிறேன். ஓசியில் கல்கி படித்தால் சுவைக்காது — முக்கியமாகக் கடுகு பதில்கள்!

பரிசு பெறுபவர் :

எம். தாமஸ்
12, வைகுண்டநாத பெருமாள் கோயில்
உத்திரமேரூர் - 603406

# Kalki Shopping Page

ஓவியர் திரு ஜி. கே. மூர்த்தியிடம் ஒரு கேள்வி.

''இந்தக் கதையில் இந்தக் கட்டத்தைப் படம் போட ஏன் தேர்ந்தெடுத்தீர்கள்?''

''நான் சொன்னதைக் கவனமாகக் கேட்டுக்கிட்டியா? கதவைத் தட்டுவேன். அவள் திறப்பாள். நீ 'கபால்'ன்னு உள்ளே பூந்து அவளைத் தள்ளிக் கட்டிப்போட்டுட்டு, வாயில் துணியைத் திணிச்சுடு. அதுக்குள்ளே நான் வாசல் கதவை மூடிட்டு வந்திடறேன். அதுக்கப்புறம் எல்லாம் சுலபமாக முடிஞ்சிடும்.''

சக தோழனுக்குச் சொல்லிக் கொடுத்தான் கோவிந்தன். அந்த வட்டாரத்தின் பிரபல திருடன். திட்டமிட்டுச் செயலாற்றுவதில் அசகாயசூரன். எதையும் துல்லியமாகச் செய்யக்கூடியவன்.

கோவிந்தனின் பார்வை அருணின் வீட்டின்மீது ஆசையாகப் படிந்தது. கண்காணித்தான். தன் 'கம்ப்யூட்டர்' மூளையில் பதிவு செய்து கொண்டான். அதன்படி...

அருண் வாரத்தில் ஆறு நாட்கள் வெளியூர் ஓட்டல்களில் (வேண்டா வெறுப்பாக) சோறு சாப்பிடும் மெடிகல் ரெப்ரஸென் டேட்டிவ். இதோ — சமயத்தில் 'ஈத்'—சில நேரங்களில் 'ஈ....த்'— அவனது இருபது வயது மனைவி. உதடு — ரேகா; கண்கள் — ஸ்ரீவித்யா; கன்னம் — ஸ்ரீப்ரியா — இப்படி உடம்பின் ஒவ்வொரு பாகத்துக்கும் ஒரு நடிகையை உதாரணத்துக்கு வைத்திருந்தான் அருண். 'முதல் குழந்தை இப்போது வேண்டாம்' என்ற கொள்கை கணவன், மனைவி இரு வரிடத்திலும். வாரம் ஒரு முறைதான் கணவன் மனைவி சந்திப்பு. அன்று சீதாபாடு அவஸ்தைதான் — இனிய அவஸ்தை!

சில ஆயிரங்கள் 'சூடான பணமாக' இரும்புப் பீரோவில் அவசரத் தேவைக் கென்று உறங்கிக் கொண்டிருக்கும். கூடவே ஒருசில நகைகள் துணையாக...



மூன்று மணிக்கு அருகில் இருக்கும் பால் டிப்போவில் கவர் பால் வாங்குவாள். நான்கு மணி வரை குட்டித் தூக்கம். வேலைக் காரப் பெண் காலையில் பாத்திரங்களைத் தேய்த்துவிட்டு, ஈரக் கையைக் கிழிசல் பாவாடையில் துடைத்து விட்டுப் போய் விடுவாள். மீண்டும் மறுநாள்தான் அவளது வருகை. கடுமையான வெய்யில் நேரம். யாரும் வெளியே தலையை நீட்ட மாட்டார்கள்.

மூன்று மணி, நாற்பத்தைந்து நிமிடங்கள், சில வினாடிகள் கழித்துக் கதவைத் தட்டினால் போதும். அரைத் தூக்கக் கலக்கத்துடன் கதவைத் திறக்கும் சீதாவை எளிதில் மடக்கிவிடலாம். அரை மணியில் அடித்த கொள்ளையுடன் கம்பி நீட்டிவிடலாம்.

கோவிந்தனின் 'கம்ப்யூட்டர்' மூளையில் பதிவாகியிருந்தன.

அந்த நாள்.

கோவிந்தனின் கணக்குப்படி அருண், திருச்சி பெரிய கடை வீதியில், எட்டு மாத கர்ப்பிணி போன்று காட்சி தரும் தோல் பையில் 'மாதிரி' மருந்துகளுடன் கடை கடையாக ஏறிக் கொண்டிருப்பான்.

மூன்று மணி நாற்பத்தைந்து நிமிடங்கள், சில விநாடிகள் கடந்துவிட—

சுற்றும் முற்றும் பார்த்துவிட்டுக் கதவருகில் வந்து நின்றான் கோவிந்தன். அருகில் அவனது தோழன்.

அழகிய கதவைத் தட்டக் கையை ஓங்க—

''பக்கத்தில் வாயேன். ஒரு 'இச்' தர்றேன்'', என்று வீட்டினுள்ளிருந்து அருண் இசையாகக் கேட்க, கோவிந்தன் சிலையாக நின்றுவிட்டான். அருண் எப்போது வந்தான்? தன் திட்டத்தில் முதல் சறுக்கலா?

''நான் மட்டும்தானே இருக்கேன்? திடீருன்னு டூர்லேந்து திரும்பி வந்திருக்கேன். சாயந்திரமே போகப் போறேன். தரக் கூடாதா? ப்ளீஸ்.... சீத....'' அருண் கெஞ்சினான்.

''ச்சீ! போங்க.... நேரம் காலம் இடையாதா? பட்டப் பகல் நேரத்திலே...'' சீதா சிணுங்கினாள்.

சீலிங் ஃபேன் 'டொர், டொர்' என்று சத்தமிட்டு அவனுக்கு ஒத்துப் பாடியது.

''போங்க... போங்க. முடியாது.... ஆ! கையை விடுங்க... வளையல் நொறுங்குது... ஸ்.....ஆ.... மீசை குத்....'' — சீதா முனகினாள்.

கோவிந்தன் அதற்கு மேல் அங்கு நிற்க அவன் பைத்தியம் இல்லை. தோல்வியைச் சுமந்தபடி உடனே கிளம்பினான் தன் தோழனுடன். தெருவைத் தாண்டிவிட்டான்.

அருண் எப்போது வந்தான்? குழப்பம் மட்டும் கோவிந்தனுக்கு மூளை முழுவதும் சூழ்ந்திருந்தது.

கோவிந்தன் சென்ற பிறகு—

''ஏய் சீத்! என்ன பண்றே அங்கே?'' அருண் கேட்டான்.

''நீங்க அசடு வழிந்ததை யெல்லாம் உங்களுக்குத் தெரியாமல் 'டேப்' செய்து வைத்து விட்டேன். உங்க அசட்டுத்தனத்தை எல்லாருக்கும் போட்டுக் காண்பிக்கிறேன். இப்போ பேசினது கூட பதிவாகி யிருக்கும்.'' சீதா குரல் கேட்டது.

சற்று நேரத்தில் சீதா 'டேப்'பை ஆஃப் செய்துவிட்டு குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தாள்.

''உங்க குரலே மட்டும் என்கிட்டத் தந்து விட்டு என்னைத் தவிக்க விட்டுட்டு ஆக்ஸிடெண்டிலே போயிட்டீங்களே? ஏன் அவ்விக்கு அவசரமாக வந்தீங்க? அவசரமாக என்னை விட்டுப் போகவா? அருண்... அருண் அருண்....

## மரமும், மன்னனும்

பஞ்சாப் அரசர் ரண்ஜீத்சிங் நாட்டைச்சுற்றிப் பார்த்து வந்த சமயம், ஒரு மரத்தடியில் இளைப் பாறிக் கொண்டிருந்தார். அவர் மீது ஒரு சிறு கல் விழுந்தது. காவலர்கள் ஒரு கிழவியைப் பிடித்து இழுத்து வந்தனர். அரசர் 'ஏன் கல்லெறிந்தாய்?' எனக் கேட்க; பசியாற கனி கொய்யும் பொருட்டு மரத்தின் மீது கல்லெறிந்ததாகக் கூறினாள். அரசர் தன் பணியாளிடம் கிழவிக்குத் தேவையான உணவும் பணமும் கொடுத்தனுப்பக் கூறினார். அமைச்சர் 'தங்கள் மீது கல்லெறிந்தவர்க்குச் சன்மானமா?' என்றார். அரசர் சிரித்து, 'மரத்தின் மேல் கல்லெறிந்தால் அது காயோ, கனியோ தருகிறது, என் மீது பட்டதற்கு நான் தண்டனை தந்தால் மரத்தை விடத் தாழ்ந்தவன் ஆவேனே!' என்றார்.



- மதுரை நாகுவேலன்



# ரசிகமணி ரசித்த மணிகள்

# பழைய அனுபவங்கள்

மீ.ப.சோமு

டிகேசி தமது கடிதங்களிலும் நண்பரோடு பேசுகிற உரையாடல்களிலும் தமது பழைய அனுபவங்கள் பலவற்றைப் பசுமை நினைவோடு சொல்லுவார். தமது இளமைக் காலத்துச் சூழ்நிலைகள், தமது ஊர் அமைப்பு முறைகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றோடு தமது பள்ளிக்கூட அனுபவங்களையும் சுவையோடு நினைவுகூர்வார். தென்காசி நண்பர் வ. சண்முகசுந்தரம் அவர்கள் இந்த நினைவுகளில் சிலவற்றைத் தமது 'டிகேசி வரலாறு' என்ற புத்தகத்தில் எடுத்துக் கொடுத்திருக்கிறார்.

டிகேசியின் வாசகத்திலேயே இதோ சில பழைய நினைவுகள்:

"அந்தக் காலத்தில் யாருடைய வீட்டிலும் வெண்கலப் பாத்திரம் கிடையாது. தண்ணீர் குடிப்பதுகூட மண்ணாலாகிய பாத்திரத்தில்தான்!

சட்டை, ரவிக்கை என்பவை இல்லை. வீட்டில் உள்ள சகல சாமான்களும் அடுக்களைப் பலகையில்தான் வைக்கப்படும். வேட்டியும் துண்டும், சேலையும் கொடிகளில்தான் கிடக்கும். பீரோ என்பது இல்லை.

காலைச் சாப்பாடு பெரும்பாலான வீடுகளில் பழையதுதான். கல்யாண வீட்டிற்கூட அப்படித்தான். காபி என்பது கிடையாது!

தம்பிடிக்கு மூன்று தீப்பெட்டிகள் விற்கப்பட்டன. அப்பொழுதும் தெருக் கடந்து போய்த் தீ எடுத்து வந்துதான் பல வீடுகளில் தீப்பற்ற வைப்பார்கள். சில வீடுகளில்தான் மூன்று வேளைகளிலும் சமையல் நடக்கும். அவ்விடங்களில் எப்போதும் தணல்இருக்கும். அவ்வீட்டார் தணற் கங்கை நெல் உமியிற் போட்டு வைத்திருப்பார்கள். மற்ற வீட்டார்எருவட்டியிலோ,கொட்டாங்கச்சியிலோ தணற் கங்கை எடுத்துக் கொண்டு செல்வார்கள். நெருப்பின் முக்கியத்தை உத்தேசித்துத்தான், குற்றம் செய்து கட்டுப்படாதவர்கள் வீட்டுக்கு "நெருப்பும் நீரும் கொடுக்கப்படாது" என்று விதித்து விட்டார்கள். அதை ஒட்டியே "நீரும் நெருப்பும் தள்ளிவைத்தல்" என்னும் பஞ்சாயத்துத்-தீர்ப்பும் வந்திருக்கிறது.

மூன்று வேளையும் சமையலாகிற வீடு பணக்காரர் வீடல்லவா? பணக்காரர்கள் நிறைந்த ஊர் ஒரு சிறப்பான அம்சம்தானே? அதை அனுபவித்த புலவர்,

"நல்லம்பர் நல்ல குடிஉடைத்து:
சித்தன் வாழ்(வு)
இல்லந்தோறும் மூன்று
எரி உடைத்து"

என், சித்தன் வாழ்வு என்னும் ஊரில் மூன்று நேரமும் சமையலாகிற காரணமாக அடுப்பு எரிந்து கொண்டிருக்கும் என்று செல்வச் சிறப்பைப் பாராட்டி இருக்கிறார்!

இனி, என்னுடைய வாத்தியாருக்கு மாதச் சம்பளம் நான்கு ரூபாய்தான். அந்த நான்கு ரூபாயில் கோட்டுத்தான், ஜரிகைத் தலைப் பாகையும்தான், கவலையற்ற வாழ்க்கையும் கூடத்தான்! மாதா மாதம் சீட்டுக்கு இரண்டு ரூபாய் வேறு போட்டு வந்தார் வாத்தியார்!

இப்போது நானூறு ரூபாய் சம்பளம் வாங்குகிறவர்கள் கூட அவ்வளவு அருமையான சுக வாழ்க்கை நடத்த முடியவில்லை. காரணம் என்ன? வேண்டாத ஆடம்பரச் செலவுகள் பெருத்து விட்டன. சமுதாயம் முழுவதும் படாடோபத்துக்கும் டாம்பீகத்துக்கும் இரையாகித் தத்தளிக்கிறது!

அந்தக் காலத்தில் டியூஷனுக்கு மாதம் கால் ரூபாய்தான்! எங்கள் வீட்டில் என்னுடைய டியூஷனுக்காக, வருடம் ஒன்றுக்கு

(ஆறு ரூபாய் பெறுமானமுள்ள) ஒரு கோட்டை நெல்லைக் கொடுத்து வந்தோம்.

அவ்வளவுதான்! டியூஷன், டியூஷன் என்று என் உயிரையே வாங்கிவிட்டார் என் வாத்தியார்! விளையாட்டும் ஓய்ந்தது. மகிழ்ச்சியும் ஓய்ந்தது. சாப்பாடு கூடச் சரிவரச் சாப்பிட முடியாது. அவ்வளவும் டியூஷன் மயம்! அது மாத்திரமா, பள்ளிக்கூடத்துக்கு (திண்ணைப் பள்ளி) மணல் சுமந்து வருவதிலிருந்து பெருக்குவது வரை எதற்கும் என்னை ஆசிரியர் கட்டளை இடுவதில்லை. காரணம் என்ன? வருடத்துக்கு மூன்று ரூபாய் பெறுமான-முள்ள டியூஷனுக்கு ஆறு ரூபாய் பெறுமானமுள்ள நெல்லைக் கொடுத்துவிட்டார்கள் என் தந்தையார்! அந்த வினையின் பயன்தான் அவ்வளவும்!

ஆசிரியர் சில பையன்களை அழைத்துச் 'சிதம்பரத்தை (சிதம்பர நாதனை) வீட்டு வரைக்கும் சுமந்து போங்கள்' என்று கட்டளை இடுவார். சுமக்காவிட்டால் பையன்களுக்கு முதுகுத் தோல் உரிந்துவிடும். ஏறி அமரா விட்டால் டியூஷனில் என்னை ஒரு கை பார்த்து விடுவார். டியூஷனுக்கென்று என் தந்தையார் அதிகமாகக் கொடுத்த பணம் என்னையே கொடுமைப்படுத்தியது! மனித வர்க்கத்தையே கொடுமைப்படுத்தியது!

அந்தக் காலத்தில் எல்லோருடைய கையிலும் பணம் அதிகமாகப் புழங்கவில்லை. எல்லோரும் ஆடம்பரத்தில் இருக்கவில்லை. ஆனால் ஆடம்பரம் நிறைந்து சகல வசதிகளும் பெருகிப் பண வெள்ளம் மறுகால் எடுத்து ஓடுகிற இந்த நாளில் அல்லவா, மனிதன் சாப்பாட்டுக்குக் கஷ்டப்படுகிறான்! சாப்பாடு ஒரு பெரும் பிரச்னையாக வந்து, அது பெரும் பிரச்னையாகி, மனித வம்சத்தையே சீரழிக்கிற அலங்கோலத்தை இந்தக் காலத்தில்தான் பார்க்க முடிகிறது!''

இது ரசிகமணி தமது இளமை நாட்களைச் சித்திரிக்கிற சொல் ஓவியம். இது போலவே தமது பள்ளிக்கூடப் பாடநூல் அனுபவங்களையும் டி.கே.சி அடிக்கடி நண்பர்களிடம் நினைவுகூர்வதுண்டு. எல்லாப் பாடங்களும் ஆங்கில மொழியிலே இருந்தன என்பதோடு கூட, அந்தப் பாடத் திட்டத்தில் என்னென்ன விஷயங்கள் இருந்தன என்பதையும் எடுத்துச் சொல்வார்.

நம்முடைய நாட்டுப் பிள்ளைகளுக்கு எந்த விஷயம் தேவை என்பதை ஆராய்ந்தல்லவா பாடங்களைத் தயாரிக்க வேண்டும்? மற்ற நாடுகளில் ஆரம்ப நிலையிலும் உயர் நிலையிலும் பிள்ளைகள் எந்தச் சரித்திரத்தையும் எந்த நாட்டுத் தட்ப வெப்ப நிலைகளையும் பற்றிப் படிக்கிறார்கள்? நம்முடைய நாட்டின் நிலை என்ன என்பதை எல்லாம் சீர் தூக்கி ஒப்பிட்டுச் சொல்வார்.

ரசிகமணியின் உயர்நிலைப் பள்ளி அனுபவங்களை அவருடைய வார்த்தைகளிலேயே கீழே தருகிறேன். இன்றைய நிலையும் அதுவே தானா என்பதை நீங்களே எண்ணிப் பார்த்துக்கொள்ளுங்கள்.

''நான் உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் பொழுது, எனக்குச் சம்பந்தமில்லாத, இந்த நாட்டில் உள்ள யாருக்குமே சம்பந்தமில்லாத பல விஷயங்கள் சொல்லிக் கொடுக்கப்பட்டன. அவை ஒன்றுகூட எனக்கு விளங்கவில்லை. மத்திய அமெரிக்காவில் உள்ளவர்களின் வாழ்க்கையும், வட துருவத்தின் சீதோஷ்ண நிலையும், ஆஸ்திரேலியாவிலிருந்து ஏற்றுமதியாகும் ஆட்டு ரோமத்தின் மதிப்பும், ஆமெஸான் நதியின் நீளமும், ஏசுநாதர் பிறப்பதற்கு முன்பு கிரேக்கர்களின் போர்ச் செயல்களும், அவர்கள் உபயோகித்த படைக் கலங்களும், மத்திய தரைக் கடற் பிரதேசங்களில் வளரும் தாவர வர்க்கங்களும், அவற்றின் பயனும், இன்னும் இவை போன்ற பல விஷயங்களும் சொல்லிக்கொடுக்கப்பட்டன! பதினைந்து பதினாறு வயதுள்ள நானும், என்னைப் போன்ற இளைஞர்களும் இவைகளை அந்தக் காலத்தில் படித்து அனுபவித்துவிட்டோம் என்று எங்ஙனம் கூற முடியும்? எனக்கு இப்பொழுது எழுபது வயதாகிறது. எவ்வளவோ அனுபவங்களைப் பெற்றிருக்கிறேன். இன்னமும் நான் உயர்நிலைப் பள்ளியில் பயின்ற பல விஷயங்கள் எனக்கு விளங்கவில்லை! அப்படி இருக்க என்னுடைய பள்ளி வாழ்க்கையில் படிப்பின் மூலம் ஆனந்தம் அடைந்தேன் என்று சொல்லுவது பொருந்துமா? எனக்கு ஆனந்தம் கொடுத்தது நண்பர்களும், விளையாட்டும்தான்.''

இவை டி.கே.சியின் வாக்கியங்கள். வாழ்வு முழுதும் நமது கல்வி முறையை அவர் எதிர்த்துப் போராடியதன் அடிப்படைக் காரணம் இப்பொழுது புரிகிறதல்லவா?



கலைக்காவலர், பத்மஸ்ரீ டி. வி. ராமானுஜம் முன்பு பம்பாய் நகர ஷெரிபாகப் பதவி வகித்த பேராசிரியர். பல தொழில் வர்த்தக நிறுவனங்களுடன் தொடர்பு கொண்டவர். பம்பாய் ஷண்முகானந்த சபையின் சிறப்புக்களுக்கெல்லாம் முக்கிய காரணமானவர். ஒரு நல்ல கச்சேரி அமைவது எப்படி என்று இங்கு அலசுகிறார். இவ்வாண்டு மார்ச் மாதத்தில் ஷண்முகானந்த சபா ஆதரவில் நடந்த கருத்தரங்கில் அவர் ஆங்கிலத்தில் பேசியதன் சுருக்கமான தமிழாக்கம் இது.

# ஒரு நல்ல கச்சேரி

—டி.வி.ராமானுஜம்

ஐம்பத்தேழு ஆண்டுகளாக நான் கர்நாடக இசைக் கச்சேரிகளை ஆர்வத்துடனும் கவனமுடனும் கேட்டு வருகிறேன். பல வித்வான்களின் நட்பைப் பெற்று நெருங்கிப் பழகியும் இருக்கிறேன். சில காலம் அரியக்குடியின் சிஷ்யனாக இருந்து இசை பயிலும் பாக்கியமும் பெற்றவன்.

இந்த ஐம்பத்தேழு ஆண்டுகளில் நான் விசனத்துடன் கவனித்து வரும் விஷயம் என்னவெனில் கச்சேரி செய்பவர்களும் கச்சேரிகள் கேட்பவர்களும் மட்டுமின்றி சபாக்களும் எண்ணிக்கையில் அதிகரித்து வருகின்றன. ஆனால் தரம் குறைந்து வருகிறது.

ஒரு நல்ல சங்கீதக் கச்சேரியின் இன்றியமையாத அம்சங்கள் என்னென்னவென்று பார்ப்போம். முதலாவது, ரொம்ப முக்கியமானது ரசிகர்களை வித்வான் குழப்பத்தில் ஆழ்த்திப் புதிர் போடாமல் இருக்க வேண்டும். சமீப காலமாக இந்தப் போக்கு வித்வான்களிடம் அதிகரித்து வருகிறது. ரசிகர்களைக் கவர்ந்திழுத்து இசைக்கு அடிமைப்படுத்திக் கொள்ள முடியாவிட்டாலும் அவர்களைக் குழப்பத்தில் ஆழ்த்தி மகிழ்ச்சி அடைகிறார்கள்!

ரசிகர்களுக்கு ரம்யமான உணர்வு ஏற்பட வேண்டுமென்றால், வித்வானுக்கே தமது சங்கீதத்தில் ஆழ்ந்த பிடிமானமும் மெய்யான ரசனையும் இருந்தால்தான் முடியும். தாம் வழங்கும் கிருதிகளின் மெய்ப்பொருளை உணர்ந்து அதில் வித்வான் உருக வேண்டும். இதைத்தான் சுவானுபவம் என்கிறோம்.

ஆழ்ந்த ஞானமும் கற்ற கலையில் விசுவாசமும் குறைந்து கொண்டு வருகிறது. வியாபார நோக்கு அதிகரித்து வருகிறது. வித்வான்கள் கரவொலி பெற முயற்சி மேற்கொள்வது வெளிப்படையாகத் தெரிகிறது. இவையெல்லாம் தவிர்க்கப்பட வேண்டும்.

சுருதியை இசையின் தாய் என்று கூறுவார்கள். அபசுவரத்துக்கு எவ்வளவு பயப்பட வேண்டுமோ அவ்வளவு அப சுருதிக்கும் அஞ்ச வேண்டும் என்பார் மதுரை மணி அய்யர். நமது வித்வான்களில் பலரிடமிருந்து சுருதி சுத்தம் விலகியது; கூடவே இளைஞர் சமுதாயமும் கச்சேரி மண்டபங்களை விட்டு வெளியேறியது! நமது வாய்ப்பாட்டு வித்வான்களில் எவ்வளவு பேர் சுருதி சுத்தத்துக்குத் தேவைப்படும் அகர சாதகம் பண்ணுகிறார்கள்?

எத்தனை பேர் சுவானுபவத்துடன் ராகம் பாடி ரசிகர்களைத் தம்மையறியாமல் சபாஷ் போட வைக்கிறார்கள்? அபரிமிதமான ராக ஞானம் இதற்குத் தேவை. ராகம் என்பது இந்திய இசையின் ஆன்மா. அதைச் சரியாகப் புரிந்து கொண்டு அதன் அசாதாரண இனிய இசைச் செல்வம் வெளிப்படுமாறு நாகரிக ஆற்றலோடு, பாவத்தோடு, சுருதி சுத்தத்தோடு கமகப் பிரயோகங்கள் செய்ய வேண்டும். அசைவுகளையும் கார்வைகளையும் சரியான தருணங்களில் பயன்படுத்தி அலங்கரிக்க வேண்டும். இவ்விதமெல்லாம் செய்து கரவொலி பெற வேண்டும். ஆனால் இன்று பெரும்பாலான வித்வான்கள் நீள நீளமான ஸ்வரப் பிரஸ்தாரங்கள் மூலமே கரவொலி பெற முயல்கிறார்கள். இதற்கும் மிருதங்கம் கஞ்சிரா கடம் போன்ற பல பக்க வாத்தியங்களின் துணை தேவைப்படுகிறது. அதிகரித்த சத்தத்தாலேயே கரகோஷம் பெற்றுவிடுகிறவர்கள் இவர்கள்!

லய ஞானம் தேவைதான். ஆனால் தேவைக்கு அதிகமாக அல்ல. சுருதி சுத்தம் எப்போதும் அபரிமிதமாகிவிடாது. ஆனால் லய ஞானத்தை அளவுக்கு அதிகமாகக் காண்பித்துக் கொள்வது ரசனை குறைவாகிவிடுகிறது. சர்க்கஸ் வேலை மாதிரி தோன்றுகிறது. சங்கீதத்தின் தூய்மையையும் விச்ராந்தியையும் இனிமையையும் கெடுக்கிறது. காலப் பிரமாணம் என்பது முக்கியம்தான். அதை நான் மறுக்கவில்லை. இசை மட்டுமல்ல, வாழ்க்கையேகூட காலப் பிரமாணப்படிதான் நடக்க வேண்டும். இதயம், நுரையீரல் போன்றவை காலப் பிரமாணத்தில் தவறினால் டாக்டரைக் கூப்பிட வேண்டியதுதான். ஆனால் சங்கீதத்தில் கணக்கு வழக்குகளுக்குத் தேவைக்கு அதிகமான முக்கியத்துவம் தருவது மூளைக்கு வேலையாகிவிடுகிறது; இதயத்துக்கும் உணர்வுகளுக்கும்வேலை இல்லாது போகிறது. நல்ல குரல் வளம்,—ராக ஞானம், சாஹித்ய பாவம் இவற்றைப் பூர்ணமாகப் பெறாதவர்கள்தான் கூடுதல் பெருஞ் பக்கவாத்தியங்களைத் தேடுவார்கள்.

போதிய எண்ணிக்கையில் வர்ணங்கள், கிருதிகள், ராகங்கள், பதங்கள், தில்லானாக்கள், ஜாவளிகள் போன்றவற்றைக் கற்றறியாமலே கச்சேரி செய்ய அவசரப்படுவது இன்றைய கர்நாடக சங்கீத வித்வான்களிடம் மற்றொரு குறை. மும்மூர்த்திகளின் கிருதிகள் பலவற்றை முக்கியமாக தியாகையர் கிருதிகளைக் கையாள்கிற திறமை



அட்டைப் படத்தில் : இந்து

வண்ணப்படம் எடுத்தது: யோகா

வேண்டும். புரந்தரதாசர், சுவாதித் திருநாள் ஆகியோர் பாடல்கள் தவிர தமிழில் சிவன், அருணாசலக் கவிராயர், முத்துத் தாண்டவர், அருணகிரிநாதர் ஆகியோரின் பாடல்களையும் தேவாரங்களையும் இதர ஜாவளிகளையும் க்ஷேத்ரக்ஞர் பதங்களையும் தில்லானாக்களையும் கவனம் பண்ண வேண்டும். நாளுக்கு நாள் புதிது புதிதாக சாகித்தியங்களை முடிவின்றிக் கற்றுக் கொண்டே இருக்க வேண்டும். இவற்றையெல்லாம் அறிந்திருந்தாலும் அந்தந்தக் கச்சேரிக்கு ஏற்ற விதத்தில் அளவாகப் பாட வேண்டும்.

இன்றைய வித்வான்கள் பலர் இசை-விருந்து சுவையாக அமைய வேண்டும் என்பதை மறந்துவிடுகிறார்கள். ரக்தி ராகங்கள் தான் சுவைக்கும். அபூர்வ ராகங்களைப் பாடிப் பிரபலப்படுத்த வேண்டியதுதான். ஆனால் ஏதோ ஒன்றிரண்டு சாகித்தியங்களோடு நிறுத்திக் கொள்ள வேண்டும். இவற்றில் மிக விரிவான ராக ஆலாபனை, சுவரப் பிரஸ்தாரங்கள் அவசியமில்லை.

வித்வான்கள் தாங்களே புதிய ராகங்களை உருவாக்கத் தேவையில்லை. புதிய சாகித்தியங்களை இயற்றவும் அவசியமில்லை. இதுவரை வழக்கத்தில் இல்லாத ராகங்களையும் கிருதிகளையும் கண்டுபிடித்துப் பாடலாம். மும்மூர்த்திகளும் பிறரும் எவ்வளவோ அரிய பெரிய செல்வத்தை விட்டுச் சென்றிருக்கிறார்கள். அவற்றுக்கு மேல் நாமும் சில சேர்க்கலாம் என்று ஆரம்பிப்பானேன்? நமது ஆற்றலை வீணடித்துக் கொள்வதுதான் மிச்சம்.

புதுமையான மாறுதல்களே கூடாது என்று நான் சொல்லவில்லை. மும்மூர்த்திகளே புதுமை செய்தவர்கள்தாம். ஆனால் புதுமைகள் என்பது, இருப்பதை மேலும் அபிவிருத்தி செய்வதாக விளங்க வேண்டுமே தவிர, சம்பிரதாயத்திலிருந்து மாறினால் என்ன தவறு என்பதற்காகவே மாற்றங்களைப் புகுத்துவது நல்லதல்ல.

கச்சேரி களை கட்டுவது அதை அமைத்துக் கொள்கிற விதத்திலும் இருக்கிறது. ஒரு கோவிலில் கர்ப்பக்கிருஹம், பிராகாரம், இதர மூர்த்திகளுக்குச் சிறு கோயில்கள், மண்டபங்கள், குளம், சுற்றுச் சுவர் எல்லாம் இருப்பது போல் கச்சேரியையும் பாங்குறத் திட்டமிட்டு அமைக்க வேண்டும். அப்போது தான் ரசிகர்களுக்கு அலுக்காமல் இருக்கும். 'நாலுமணிநேரம், இரண்டேராகம் இரண்டே கிருதி' என்று பெருமையாகக் கூறிக்கொள்வதில் அர்த்தமே இல்லை.

குரல் பயிற்சி என்பது ரொம்ப முக்கியம். இதை கர்நாடக சங்கீத வித்வான்கள் அலட்சியம் பண்ணுகிறார்கள். ஹிந்துஸ்தானிப் பாடகர்கள் அதிக முக்கியத்துவம் தருகிறார்கள். பார்க்கப் போனால் கமகங்கள் காரணமாக கர்நாடக சங்கீதத்துக்குத்தான் குரல் வளம் மேலும் அத்தியாவசியம்.

ஸ்ரீரங்கத்தில் அரியக்குடி, தினம் அதிகாலையில் ஆயிரங்கால் மண்டபத்தில் அமர்ந்து அகார சாதகம் செய்வார். மேதைத் தன்மை என்பது பிறவியில் வருவது பத்து சதம். மீதம் தொண்ணூறு சதம் உழைப்பினால்தான் அடைய முடியும்.

இவற்றையெல்லாம் கவனத்தில் கொண்டால் நமது இனிய சமுதாயம் கர்நாடக சங்கீதத்தில் பற்றுதலுடன் விளங்கும்.

ரசிகர்களுக்கு ஒரு வார்த்தை. கச்சேரிக்குப் போவது இப்போதெல்லாம் கிளப்புக்குப் போவது போலாகி விட்டது. அரட்டை அடிக்கவும், புதிய புடவையை நாலு பேர் பார்க்கவும், வாய்க்கு ருசியாக காண்டீனில் வெட்டவும் ஒரு வாய்ப்பாகக் கச்சேரியைப் பயன்படுத்தக் கூடாது. கர்நாடக இசை போன்ற உயர்ந்த கலையை அனுபவிக்க நமது ரசனையும் வளர வேண்டும். சூழ்நிலையை அதற்கு நாம் சாதகமாக்கிக்கொள்ள வேண்டும். கச்சேரி நடுவில் தனியின்போது எழுந்து போகாத கட்டுப்பாடு வேண்டும்.

மைக் அளவோடு ஒலிக்க வேண்டும். அளவுக்கு அதிகமான ஒலிபெருக்கியே ரசிகர்கள் அரட்டை அடிக்க வாய்ப்பாகவும் தூண்டுகோலாகவும் அமையும்.

கடைசியாக நான் வித்வான்களிடம் கேட்டுக்கொள்வது, அரங்கில் ஏறியபின் பரி-சோதனைகளைச் செய்யாதீர்கள் என்பதுதான். புதிய சாகித்யமோ, ராகமோ, தாளமோ எதுவானாலும் வீட்டிலே மணிக் கணக்காகச் சாதகம் பண்ணித் தேர்ச்சி பெற்ற பின் சபைக்கு வரவும். அங்கே நீங்கள் ரசிகர்களுக்கு அளிப்பது பூரணத்துவம் பெற்ற சங்கீதமாக இருக்க வேண்டும். மேடை ஏறிய பின் சுருதி சேர்த்துக் கொண்டிருப்பதும், மனோதர்மம், 'மூட்' என்றெல்லாம் சொல்லிக் கொண்டு மேடையில் புதிய பரிசோதனைகளைச் செய்வதும் ரசிகர்களை அவமானப்படுத்துவதாகும்.

கச்சிதமான கலையழகுடன் கூடிய முழுமை பெற்ற சங்கீதம், மகிழ்ச்சி தருவது மட்டுமல்ல, இதயத்தை உருக்குவித்து, இறையுணர்வையூட்டி, பரமானந்தத்தில் மெய் சிலிர்க்கச் செய்யும்!

தமிழாக்கம் : குட்டிகிருஷ்ணன்

# ஓவியர்களின் பதில்



கதை: கமான் கமல்: ஓவியர் நடனம் பதில் : வாணிக்குப் படித்துக்காட்டுவார்; ஆனல் பாலசந்தர் சிறப்போகிருர்!



கதை — திடீரென்று வந்தவன். ஓவியர் ஜி. கே. மூர்த்தி பதில்:

இந்தக் கதையில் கீதா என்னும் பெண்மணி தன் கணவனை இழந்த நிலையிலும் தனக்கு வர இருந்த ஆபத்திலிருந்து தப்பி விட்டாள். அதை அதிர்ஷ்டம் என்று நான் ஒதுக்க மாட்டேன். இறைவனைப் பார்த்து அந்த அபலைக்கு உதவியது போலிருக்கிறது. அவள் மகிழ்ச்சியாக வாழ்ந்ததையே ஓவியமாக வரைந்துள்ளேன். ஆபத்து அணுகுவதையும் காட்டியுள்ளேன்.



கதை — மௌனம்: ஓவியர் லதா பதில்.

ஒரு அனுபவம் சொல்கிறேன். சுமார் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் எனக்குத் தெரிந்த நடுத்தரக் குடும்பம் ஒன்றில் தாய் தந்தையர் இருவருமே பிற்போக்கு எண்ணத்துடன் பெண்ணிடம் கொடுமையாக நடந்து கொண்டனர். அந்தப்பெண் எளிய குடும்பத்து வேலையில்லாத வாலிபனைக் கோவிலில் மணம் புரிந்துகொண்டு ஐந்தாறு வருடங்கள் கடுமையான சோதனைகளைத் தாண்டி இப்பொழுது மிக்க மகிழ்ச்சியாக வாழ்கிருள். அதே தாய் தந்தையர், பிறந்த வீட்டிற்கு வந்த மகளைக் கண்களில் நீர்மல்க வரவேற்று, பேரப் பிள்ளையைக் கொஞ்சி, ஆனந்திப்பதைப் பார்த்து ஆச்சரியமேற்பட்டது!



கதை: 'ஒரு சிறகு இரு பறவைகள்' ஓவியர் திரு மணியம் செல்வன் பதில் :

இந்தக் கதையிலே எனக்கு மிகவும் பிடித்தமான அம்சம்:

- நடை




திரு உமாசந்திரன் எழுதிய 'முதுகெலும்பு' சிறுகதை படித்தேன். அமெரிக்க சைக்கியாட்ரிஸ்டுகள் அளிக்கும் ஆலோசனைகளில் கணிசமான பகுதி இந்த 'முதுகெலும்பு' விஷய மானதுதான்! இதை Assertiveness Training என்று கூறுகிறார்கள்.

'ஒருதலை ராக'த்தில் ரூபா சங்கரை இழந்தது AT இல்லாத தால்தான்! 'கழுத்தில் விழுந்த மாலை'யில் மாதங்கி தன் கணவனைத் திரும்பப் பெற்றது AT பெற்றிருந்ததால்தான்!

சைக்கியாட்ரிஸ்டுகள் கூறுவதன் சாராம்சம்:

- எப்பொழுதும் மற்றவருக்குத் தொண்டு செய்வதுதான் நமது கடமை என்று நினைத்துக்கொண்டு இயலாததையும், விருப்பம் இல்லாததையும் செய்து கொண்டிருக்காதீர்கள்! உங்கள் உரிமைகளையும் ஆசைகளையும் வெளிப்படுத்துங்கள்.
- எல்லாம் விதிப்படிதான் நடக்கும் என்று சும்மா இருக்காதீர்கள். உங்கள் லட்சியங்களைப் பட்டியல் தயாரித்துக் கொண்டு, அவற்றை அடைவதற்கான செயல் முறைத் திட்டத்தைத் தயாரியுங்கள். அதை முழு மூச்சுடன் செயல்படுத்துங்கள். எல்லாத்தகுதிகளும் சமமாக இருக்கும் பட்சத்தில் அடுத்தவன் வெற்றி பெறுவது அவன் செயல் படுவதால்தான். இரண்டு லட்சியங்கள் ஒன்றோடொன்று மோதிக் கொள்ளும் போது எது முக்கியமோ அதைச் செயல்படுத்துங்கள். மற்ற லட்சியத்தை ஒத்திப் போடுங்கள். வாழ்க்கையில் வெற்றி தான் நமக்கு மகிழ்ச்சியளிப்பது என்பதில்லை. வெற்றியை நோக்கி உண்மையாகச் செயல்படுவதுகூட மகிழ்ச்சி தரும்.
- குற்ற மனப்பான்மைகளையும் தாழ்வு மனப்பான்மைகளையும் உருவாக்கிக்கொள்ளாதீர்கள். காப்பியில் நீய்ந்த வாசனையா? பரவாயில்லை. அதையே நாள் முழுவதும் நினைத்து நேரத்தை வீணாக்காதீர்கள். நாளை நல்ல காப்பி தயாரித்துக் கணவருக்குக் கொடுக்கலாம். உங்களுடைய தவிர்க்க இயலாத தாமதத்தால் ஆபீஸில் வேலை கெட்டுக் கம்பெனிக்கு 2000 ரூபாய் நஷ்டமா? அதையே நினைத்துச் செயலற்றுப் போய் மேலும் 2000 ரூபாய் நஷ்டம் வைக்காதீர்கள். முறையாக மன்னிப்புக் கேட்டுக் கொண்டு முழு கவனத்துடன் செயல்படத் துவங்குங்கள். உலகமே உங்களுடைய ஒரு தவறால் அஸ்தமித்து விடாது.
- நீங்கள் அழகில்லாதவர், அல்லது பேசிப் பழகுவதற்குச் சுவாரஸ்யமில்லாதவர் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்களா? அவ்வாறு நினைப்பது நீங்கள் ஒருவராகவே இருக்கக் கூடும். கவலைப்படுவதை விட்டு மற்றவர்களுடன் சுவாரஸ்யமாகப் பேசிப் பழகுவது எப்படி என்று யோசியுங்கள். படியுங்கள். பார்ட்டிகளில் சொல்லுவதற்கான கதை, ஜோக்குகளைத் தயாரியுங்கள். ஒத்திகை பாருங்கள்.
- உங்களது கருத்துக்களையும் ஆசைகளையும் நேரிடையாக வெளிப்படுத்தக் கற்றுக் கொள்ளுங்கள். உங்கள் கணவரை ''நீங்கள் இன்று மாம்பலம் போவீர்களா?'' என்று கேட்டு விட்டு, அவர் ஏன் என்று கேட்கவும், ''இல்லை! மாம்பலம் போனால் அப்படியே ஒரு கிலோ தக்காளி வாங்கி வர முடியுமா'' என்று கேட்காதீர்கள். அதைவிட நேரிடையாக, ''முடிந்தால் மாம்பலத்திலிருந்து ஒரு கிலோ தக்காளி வாங்கி வாருங்கள்'' என்று சொல்லுங்கள்.
- 'நான் கூறுவது என்னவென்றால்', 'இது எனக்கு விருப்பமானது' என்றெல்லாம் உங்களுடைய கருத்தைத் துணிந்து வெளியிடுங்கள். இது உங்கள் சுயமரியாதையை வளர்க்கும். மற்றவர்கள் உங்கள் கருத்துக்களை மதிப்பார்கள்.
- உங்களுக்கு மற்றவரால் ஒரு உதவி தேவைப்படுகிறதா? தைரியமாக அவரிடம் கேளுங்கள். உங்கள் கணவரை சினிமா அழைத்துச் செல்லச் சொல்லத் தயங்காதீர்கள், பளிச்சென்று கேளுங்கள். மனைவியின் ஒத்துழைப்பு இரவில் இன்னும் அதிகமாகத் தேவைப்படுகிறதா? மனைவியைத் தைரியமாகக் கேளுங்கள். மனசுக்குள்ளேயே புழுங்க வேண்டாம்.

இதுபோல் பல!

திரு ஹெர்பர்ட் பென்ஸ் டெர்ஹெய்ம் எழுதிய ''Dont, say yes when you want to say No'' என்ற புத்தகம் (A dell book) AT பற்றி அருமையாக விளக்குகிறது. இது போன்ற புத்தகங்களைப் படித்தால் வாழ்க்கையில் பல ரமணிகள் முதுகெலும்புள்ளவர்களாவார்கள்.

பல சுமை தூக்கிகள் வேண்டாத சுமைகளைத் தூக்கி எறிந்துவிட்டு, விருப்பமான 'சுமைகளை'த் தூக்கி மகிழ்ச்சி அடைவார்கள். நாடும் முன்னேறும்.

- ஆர். கிருஷ்ணமூர்த்தி





# வடக்கே ஒரு வெற்றிக்கொடி!

**பாலசந்தர் ஹிந்திப் படவுலகில் தம் கொடியை ஏற்றியிருக்கிறார். ஏக் தூஜே கேலியே' (ஒருவருக்காக மற்றவர்) படத்தின் மூலம். 'மரோ சரித்திரா' மூலம் சரித்திரம் பண்ணிய இவர், இந்தியிலும் சரித்திரம் படைப்பார்.**

கமலஹாஸன், ரதி ஆகியோருக்கும் இந்தி மார்க்கெட் பிடித்துக்கொண்டு விடும். கமலின் நடிப்பைப் பார்த்து ரசிகர்கள் 'கமால் ஹை' என்று பாராட்டும்போது தெரிகிறது.

டேப் ரிகார்டர் வாங்கும்போது பலவித இசையை ரிகார்ட் பண்ணி டெமான்ஸ்ட்ரேஷன் டேப் தருவார்கள். அது மாதிரி இப்படத்தில் கமலின் பலவித சாமர்த்தியங்களை — நிச்சயமாக அனாவசியம் என்று தெரிந்தும் — புகுத்தியிருக்கிறார். கமல் டூப் இல்லாமல் மோட்டார் சைக்கிளில் ஸ்டண்ட் செய்கிறார். பாலத்திலிருந்து தண்ணீரில் டைவ் அடிக்கிறார். பரதநாட்டியம் ஆடுகிறார். (சொல்லக் கூடாது. கோபி கிருஷ்ணாவைச் சாப்பிட்டு விடுகிறார்) தனக்கு எல்லாவித இந்தியும் வரும் என்று பஞ்சாபி, போஜ்பூரி, அவதி என்று மிமிக்ரி செய்கிறார் (ஒரு வருடம் ஆசைக் காதலியைப் பிரிந்துவிட்டு ஓடோடி வருகிற இவர், காதலியைச் சந்திக்காமல் எல்லோருக்கும் மாறே ஆக்டிங் செய்கிறது தான் பிசிர் அடிக்கிறது!) ஃபைட்டிங்கையும் விடவில்லை.

படத்தில் பல இடங்களில் தமிழிலேயே வசனம் வருகிறது. இந்தி ரசிகர்கள் விசில் அடிக்காதபடி அமைத்திருக்கிறார்கள்.

கமலின் ஹிந்தி உச்சரிப்பில் அதிக மதராஸி வாடை இல்லாததற்கு சபாஷ் போட வேண்டும். அவரது 'அண்டர் ஆக்டிங்'கும் முணுமுணுப்பாக சில சமயம் டயலாக் பேசுவதும், ரிஷி கபூரின் ஆட்டத்தையும், அம்ஜத் கானின் கத்தலையும் ரசித்துப் பழக்கப்பட்ட இந்தி ரசிகர்களை எவ்வளவு தூரம் கவரும் என்பது ஒரு சின்னக் கேள்வி.

படத்தில் பாலசந்தர் நன்றாகப் பளிச்சிடுகிறார். ஆனால் 18 ரீலுக்குக் கதையை வளர்த்திப் போயிருக்க வேண்டாம். மாதவிடம் கமல் இந்தி கற்பது சரி. பரத நாட்டியம் எதற்கு? கமலின் அப்பா பூர்ணம் குடும்பத்தினர், பக்கத்து வீட்டு ரதியின் குடும்பத்தினருடன் அடிக்கடி வாக்குவாதம் நடத்துவது அதிகமாகப் படுகிறது. கடைசியில் காதலர்கள் கடற் கரையில் இறந்த பிறகும் ஒரு தத்துவ வசனம் கமல் குரலில் சொல்லப்பட்ட பிறகும், நாலைந்து ஷாட்டுகள், வானம், பூமி, சூரிய அஸ்தமனம் என்று காட்டியிருக்க வேண்டாம்.

இசை, படப்பிடிப்பு, பாடல்கள் எல்லாம் ஏ ஒன். எஸ். பி. பி. யும் இந்திக்குத் தாவுவதற்கு வாய்ப்பு.

வெகு நாட்களுக்குப் பிறகு ஒரு சுத்தமான, அழகான இந்திப் படம் பார்த்த திருப்தி நமக்கு ஏற்படுகிறது. ஒரு மாறுதலான படம் என்கிற காரணத்தாலும் இதற்குப் பெருத்த வரவேற்பு இருக்கிறது.

ரஞ்சனுக்குப் பிறகு இந்திப் பட உலகில் கொடி ஏற்றப் போகும் ஹீரோ கமலாகத்தான் இருப்பார்; அதே மாதிரி டைரக்டர் ஸ்ரீதருக்குப் பிறகு பாலசந்தராக இருப்பார். - பி.எஸ்.ஆர்.

# பிரதாப் ஆடிய பரதநாட்டியம்



✖ "...வந்த ஆபத்தை நினைத்தால் இப்பவும் பயமாயிருக்கிறது ....."

✖ .... புத்தகப் புழு ....

"எட்டு வருடங்களுக்கு முன்னால் நான் விளம்பரக் கம்பெனி ஒன்றில் வேலை செய்து கொண்டிருந்தேன். இன்று போலவே அன்றும் நான் பிரம்மச்சாரி. எனக்கு அவ்வளவாக லாட்ஜுகளில் தங்குவது பிடிக்காது. அதனால் ஒரு வீட்டில் 'பேயிங் கெஸ்ட்'டாக — பணம் கொடுக்கும் விருந்தாளியாக — இருக்க முடிவு செய்தேன். அங்குதான் நாம் இப்போது சென்றுகொண்டிருக்கிறோம்" என்று பிரதாப் கூற, தென்னிந்திய நடிகர் சங்கத்தின் பக்கத்திலுள்ள ஒரு வீட்டின் முன் கார் நின்றது.

அந்த வீட்டின் ஒவ்வொரு அறையும் ஒவ்வொரு விருந்தாளி தங்கும் அறையாக மாற்றப்பட்டிருந்தது. பிரதாப் அங்கிருந்தபோது குடிவந்த 'விருந்தாளிகள்' சிலர் இன்னும் அங்கேயே இருக்கிறார்கள். பிரதாப்பைப் பார்த்தவுடன் அவர்கள் குசலம் விசாரித்தார்கள். தாங்கள் பார்த்த படங்களில் பிரதாப்பின் நடிப்பை விமரிசித்தார்கள். "இந்த



✱ ''...மாலையில் குட்டை மதில் மீதுஉட்கார்ந்திருப்போம்...''



✱ ''இப்போ எல்லாம் 'நீட்'டாக இருக்கிறது .... நான் இருந்தபோது ஒரே களேபரம்!''

அறையில்தான் குடியிருந்தேன்'' என்று பிரதாப் சுட்டிக் காட்ட, அந்த அறையில் படமெடுக்க அனுமதிக்க வேண்டும் என்று கேட்டவுடன், அறைக் கதவைத் திறந்து வைத்துவிட்டு, ''படமெடுத்த பிறகு என்னை அழையுங்கள்; நான் உங்களுக்குத் தொந்தரவாக நிற்க விரும்பவில்லை'' என்று பெருந்தன்மையுடன் கூறி மறைந்துவிட்டார், அந்த அறையில் இன்று வசிப்பவர்.

''இப்பொழுது அறையை ஒழுங்காக வைத்திருக்கிறார். நான் வசித்தபோது ரொம்ப மோசமாக இருக்கும். இரவில் விளக்குகள் பல மணி நேரம் எரிந்து கொண்டிருக்கும். காரணம் நான் ஒரு புத்தகப் புழு.'' என்ற பிரதாப், தாம் புத்தகப் பிரியனாக இருந்ததால் ஏற்பட்ட சண்டையையும் விவரித்தார்.

''எனது நண்பனிடமிருந்து ஒரு நாள் ஒரு புத்தகத்தை வாங்கிக் கொண்டு வந்தேன். படித்து முடித்த பின் எங்கே வைத்தேனென்று நினைவில்லை. நண்பன் மிக அவசரமாக அந்தப் புத்தகம் தேவை என்று வற்புறுத்த ஆரம்பித்தான். எங்கு தேடியும் புத்தகம் மாயமாய் மறைந்த விதம் தெரியவில்லை. நண்பன் கோபமாய்ப் பேசிவிட்டுப் போய்விட்டான்.

''ஒரு ஞாயிற்றுக் கிழமை அறையைச் சுத்தப்படுத்தலாம் என்று உட்கார்ந்தேன். காட்ரெஜ் பீரோவை நகர்த்தி, பின்னால் ஒட்டடை தூசுகளைத் தட்ட நினைத்தபோது, அதன் பின்னால் நான் தேடிக்கொண்டிருந்த நட்பை முறித்த புத்தகம்! முதல் காரியமாகப் புத்தகத்தை நண்பனிடம் திருப்பிக் கொடுத்து ஃப்ராக்சர் ஆன நட்புக்குக் கட்டுப்போட்டு விட்டு வந்தேன்'' என்ற பிரதாப், குளியலறைக்குள் எட்டிப் பார்த்துவிட்டு ஒருமுறை உடலைச் சிலிர்த்துக் கொண்டார். ''என்ன விஷயம்?'' என்று கேட்டேன்.

''நான் குளிக்கப் போனால் அப்போது டாப் ஹிட்டாக இருக்கும் பாடலைப் பாடிப்பார்க்காமல் இருக்க மாட்டேன். சரியாகப் பாட வரும் வரை விடமாட்டேன். இதனால் குளியலறையை விட்டு வெளியே வர ஒரு மணி நேரமாவது ஆகும். ஒரு நாள் இப்படித்தான் நான் பாடிக்கொண்டே குளிக்கும்போது சுடு தண்ணீர் வரும் குழாயைத் திறக்க, குமிழ் கையுடன் வந்துவிட்டது! தலைக்கு மேலே கொதிக்கும் தண்ணீர் கொட்டுகிறது. துள்ளி அப்பால் நகர்ந்தேன். ஷவரை நிறுத்த முடியவில்லை. ஷவரின் சிதறல் மேலே படாமல் குமிழைத் திரும்பப்பொருத்த முடியவில்லை. என்ன செய்வது எனப் புரியாமல் 'ஓ' எனக் கத்தினேன். நான் கத்துவதே வழக்கமாகப் பாடுவது போல் இருந்ததோ என்னவோ, யாருமே உதவிக்கு வரவில்லை. குளியலறையை விட்டு வெளியே வரலாம் என்றால் சோதனை போல் கதவு திறக்க மாட்டேன் என்று அடம் பிடித்தது. உடம்பெல்லாம் சோப்பு நுரை வழிய, ஒரு கை கதவைத் திறக்க முயல, மறு கை குமிழைப் பொருத்த முயல ஒரே சமயத்தில் பரத நாட்டியமும் குச்சுப்புடியும் ஆடுவதுபோல் இருந்தது. இதற்குள் பக்கத்துக் குளிய லறையின் கதவு திறக்கப்படும் ஓசை கேட்டது. அங்கு குழாய் திறக்கப்படவே எனது குழாய்த் தண்ணீர் நின்று விட்டது. நானும் குழாயைப் பொருத்தி இறுக்கி மூடினேன். இப்போது நினைத்துப் பார்த்தால்கூட உடம்பெல்லாம் வெந்து புண்ணாகிவிடுமோ என்று பயமாயிருக்கிறது'' என்றார் பிரதாப்.

தோட்டத்துக்கு வந்தோம். அங்கு மதில் மீது அமர்ந்தார். ''மாலையில் சாப்பிட்டவுடன் நாங்கள் இந்தக் குட்டைச் கவரின் மீதுதான் உட்காருவோம். நண்பர்கள் சிலர் தெருவில் போகும் வரும் பெண்களை ரசிக்க ஆரம்பிப்பார்கள். வேறு சிலர் பெண் நண்பர்களின் வரவை எதிர் நோக்கியிருப்பார்கள்....''

''நீங்கள்...?'' என்றேன்.

''எனக்கு இரண்டுமே, அன்றும் இன்றும் கிடையாதப்பா! ஆளைவிடு!''என்று கண் சிமிட்டிக்கொண்டே கூறினார்பிரதாப்.

—''சயன்''

புகைப்படங்கள்: யோகா

# மௌனம்

## கருணையானந்தன்

அன்றொரு நாள்—

வாசல் வளைவில் பின்னிக் கிடந்த மல்லிகைக் கொடியில் பூப் பறித்துக் கொண்டிருந்தாள் உமா.

நிறையப் பூக்களை வைத்துக் கொண்டு கைக்கு எட்டாத உயரத்தில் அசைந்தாடிக் கொண்டிருந்த ஒரு கொடியை வளைக்க அவள் ஸ்டூலின் மேல் எம்பி நின்று பிரயத்தனம் செய்தபோது அவளுடைய மேலாடை விலகிக்கொண்டு விட்டது.

அவள் அதைக் கவனிக்கவில்லை.

மொட்டை மாடியில் இருந்த சதாசிவம், எதிர் வீட்டு ஜன்னலில் தெரிந்த இளைஞனிடம் தென்பட்ட பரபரப்பையும் அவனுடைய கண்களில் தெறித்த பிரமிப்பையும் கண்டு, அவனுடைய பார்வை சென்ற இலக்கை நோக்கி எட்டிப் பார்த்தார்.

கெட்டுப் போய்க் கொண்டிருக்கும் புதிய தலைமுறையினருக்கு மத்தியில் தன் பெண்ணை நல்லொழுக்கத்தின் இலக்கணமாக வளர்த்து வருவதாக இறுமாப்புக் கொண்டிருக்கும் அவர், பொறுப்பாரா அந்தக் காட்சியை?



சண்டமாருதமாகக் கீழே இறங்கி வந்தார்.

''வா....உள்ளே!''

கையில் கழியுடன் ருத்ரமூர்த்தியாக நின்றார் சதாசிவம்.

''அதென்ன எருமை மாடாட்டம்...... கொஞ்சம் கூட ஸ்மரணை இல்லாமல்...? ஒரு நாளைப் போல மறு நாள் இப்படிக் காட்டிக்கிட்டு நின்னேன்னு வேணுமின்னுதான் இப்படி நிக்கறேன்னு கணக்குப் போடுவான்... இருட்டற வேளையில நீ கோயிலுக்குப் போறப்ப வந்து 'வர்றயாடி'ன்னு கையைப் பிடிச்சு இழுப்பான்.''

வயதுக்கு வந்துவிட்ட பெண் என்ற தயக்கமோ, தாயில்லாப் பெண்ணாயிற்றே என்ற தாட்சண்யமோ இல்லாமல் விளாசித் தள்ளிவிட்டார் சதாசிவம்.

அவருக்கு ஒழுக்கம் முக்கியம்.

''மிருகங்களைவிட மனுசா ஒசத்தின்னு ஆம்பளையை விடப் பொம்மனாட்டி ஒசத்தி... புரிஞ்சுக்கோ. ஏன்னா... அவதான் சபல புத்தியுள்ள ஆணையும் அடக்கி ஆண்டு சமுதாய ஒழுங்கைக் கட்டிக் காத்துப் பரிபாலனம் பண்றவ. அந்தப் பொறுப்பை உணர்ந்து ஒழுக்கமா நடந்துக்கணும்கிற பிரக்ஞை ஒவ்வொரு விநாடியும் பொண்ணுக்கு இருக்கணும்... புரியுதா?''

கடு சரங்களாக வந்து விழுந்தன வார்த்தைகள்.

அன்று அப்பாவின் கோபம் அவளுடைய மேனி எங்கும் வரிவரியாக எழுதப்பட்ட வேதனையில் தேற்றுவார் யாருமின்றித் தனிமையில் விசித்துக் கொண்டிருந்த வேளையிலும், 'அப்பா நல்லதுக்குத்தானே கண்டிக்கிறார்' என்று எண்ணிய தன் அப்பாவித்தனத்தை எண்ணி இப்போது தனக்குள் நகைத்துக் கொண்டாள் உமா.

'இந்த ஒரு வருடத்தில் நான் எவ்வளவு மாறிப் போய்விட்டேன்' — அவளுக்கே பிரமிப்பாக இருந்தது.

சிறு வயது முதல் அப்பா வரைந்த கோட்டுக்குள்ளேயே பேதமையோடுமுடங்கிக் கிடக்கப் பழகிப் போயிருந்தவள், 'ஸ்பெஷல் கிளாஸ்' என்று அப்பாவிடம் பொய் சொல்லிவிட்டு வந்து இதோ — 'பாய் பிரண்டோடு' கடற் கரை மணலில் உட்கார்ந்து கொண்டிருக்கிறாள்.

''என்ன டியர்.... இருக்கியா?'' — அவள் விலாவில் நிமிண்டினான் சதீஷ்.

''....ம்ம்ம்'' — அவள் முறைப்பாகச் சிணுங்கினாலும் உள்ளுக்குள் இனிப்பாக இருந்தது அவளுக்கு.

'சதீஷ் என்னிடம் எத்தனை அன்பாக இருக்கிறார்!''

ஊரில் விரல் விட்டு எண்ணிவிடக் கூடிய ஒருசில பணக்காரர்களில் சதீஷின் அப்பாவும் ஒருவர். சதீஷ் அவருக்கு ஒரே பிள்ளை. பெண்களை வசப்படுத்தும் கம்பீரமான தோற்றம்.

ஓவியர் (லதா) திரு வி. வி. சீனிவாசன் அவர்களிடம் கேட்ட கேள்வி;

இந்தக் கதையைப் படித்ததும் உங்களுக்குக் கடந்த கால சம்பவம் ஏதும் நினைவு வந்ததா? (அனுபவித்தது அல்லதுகேள்விப்பட்டது.)



சதீஷின் நட்புக்காக எத்தனையோ பெண்கள் காத்துக் கிடந்தனர்.

'நான் அதிர்ஷ்டக்காரி'— அடிக்கடி நெருடும் அந்த எண்ணக் கீற்றில் உமாவின் மனம் பூரித்துப் போகிறது.

சதீஷின் அறிமுகம் கிடைத்த நாள் தொட்டு, ஒரு புது உலகுக்கே வந்து விட்டாற்போல் ஒரு இன்ப மயக்கம் அவளைத் தாலாட்டிக் கொண்டே இருந்தது.

கடல் காற்று அவள் காதோரத்துமயிர் சுருளைச் செல்லமாக வருடிவிட்டுச்செல்கிறது. அந்தச் சுகத்தில் அவளுக்குச் சிலிர்க்கிறது.

''ஆனாலும் உன்னைப்போல் ஒரு பயந்தாங் கொள்ளியை நான் பார்த்ததேயில்லை

தவழ்ந்து வந்த அலைகளை நோக்கிச் சிறு கற்களை எறிந்து கொண்டிருந்த சதீஷின் குரலில் எரிச்சல் மண்டிக் கிடந்தது.

விஷயம் இதுதான்—

ஒரு பிற்பகலில் காரில் மகாபலிபுரம் போய் உல்லாசமாகச் சுற்றித் திரிந்துவிட்டு மாலையில் ஊர் திரும்பிவிடலாம் என்பது அவனுடைய கோரிக்கை. கொஞ்ச நாட்களாகவே நச்சரித்துக் கொண்டிருந்தான். உமாவுக்குத் தைரியமில்லை.

''நானென்றும் கோழை இல்லை சதீஷ். அஞ்சுவதற்கு அஞ்சாமை பேதைமையில்லையா''? —இதமாகக் கேட்டாள் உமா.

''நீ என்னைக் கண்டு பயப்படறே — அப்படித்தானே?'' — அவன் கண்களில் தெரியும் கோபம் நிஜமா அல்லது விளையாட்டுக்கா?

''வேண்டாம் சதீஷ்... நீங்கள் இப்படியெல்லாம் பேசினால் நான் அழுதுவிடுவேன்... பிறகு உங்களோடு பேசவே மாட்டேன். என்னைப் புரிந்து கொள்ள மாட்டேன் என்கிறீர்களே. உங்களோடு 'பிக்னிக்' வர எனக்கு மட்டும் ஆசை இல்லாமலா? மகாபலிபுரம் என்ன... நீங்கள் எங்கே அழைத்தாலும் வரத் தயார். ஆனால் எல்லாம் நம் கல்யாணத்துக்கு அப்புறம்தான்!''

''நல்லா இருக்கு நீ சொல்வது... நானு கல்யாணம் பண்ணிக்க மாட்டேனென்கிறேன்... நீதான் உங்கப்பாவைச் சம்மதிக்க வைக்கிறது கஷ்டம்னு சொன்னே'' என்றான் சதீஷ்.

உமா மௌனமானாள்.

'ஒழுக்கத்தை உயிர் மூச்சாக வலியுறுத்தும் முன்கோபக்கார அப்பாவுக்கு இந்தக் காதல் விவகாரம் தெரிய வந்தால் மென்னியைத் திருகிவிடுவார்... சந்தேகமே யில்லை.'

'சரி... அப்பாவுக்குப் பயந்து கொண்டே இருந்தால் காதல் என்னவது?'

வாதமும் எதிர் வாதமுமாக அவள் நெஞ்சில் தோன்றி அவளை அலைக்கழித்தது.

'சந்தர்ப்பம் பார்த்துச் சீக்கிரமே அப்பாவிடம் விஷயத்தை வெளியிட வேண்டும்... அப்பா கத்தி ஆர்ப்பாட்டம் செய்யத்தான் செய்வார்' என்றெண்ணிய உமா, அப்படியொரு சந்தர்ப்பத்தில் தன் பங்கு நியாயத்தை எப்படி எடுத்துரைத்து அப்பாவைச் சம்மதிக்க வைக்க வேண்டும் என்று மனத்திற்குள்ளாகவே ஒத்திகை பார்க்கலானாள்.

சதீஷின் கார் நின்று கொண்டிருந்த இடத்துக்கு வந்து விட்டார்கள்.

''உமா... காரில் ஏறு...உன்னைக்கொண்டு போய் வீட்டில் 'டிராப்' பண்ணிவிட்டுப் போகிறேன்'' என்றான் சதீஷ் காரின் கதவைத் திறந்து வைத்துக் கொண்டு.

''ஊஹூம். வம்பாகிப் போகும். வழக்கம் போல் நான் பஸ்ஸிலேயே போய்க்கொள்கிறேன்.'' என்று சொல்லிவிட்டு நகர்ந்தாள்.

புத்தகச் சுமையை நெஞ்சோடு அணைத்தபடி படியேறித் தன்னுடைய அறையை நோக்கி விரைந்த உமாவை ஹாலிலிருந்து வந்த சதாசிவத்தின் குரல் தடுத்து நிறுத்தியது.

''நில்.... இத்தனை நேரம் எங்கே போயிருந்தாய்?''

அந்தக் கர்ஜனையைக் கேட்டதும் பழக்கம் காரணமாக நடுநடுங்கிப் போன உமா சட்டென்று சுதாரித்துக் கொள்ள முயன்றாள்.

குற்றது. வதனாவை அழைத்து அவளுக்குச் சந்தேகம் ஏற்படாத வண்ணம் கேள்விகளைப் போட்டு, 'ஸ்பெஷல் கிளாஸ்' இல்லை என்ற உண்மையைத் தெரிந்து கொண்டு விட்டார்.

விநாடிகள் நிமிடங்களாக உருப்பெற்ற பின்னும் எதிரே இடிமுழக்கங்கள் கேட்காத ஆச்சரியத்தில் இமைகளைப் பிரித்த உமா, அப்பாவின் நிலை கண்டு துணுக்குற்றாள்.

'ஆட்டுக் குட்டியைப் போல் அடங்கிக் கிடந்த மகள் எதிர்த்துக் கொண்டு நிற்கிறாளே' என்ற அதிர்ச்சியா?

'எது எப்படியானாலும் முதல்கட்ட வெற்றி எனக்குத்தான்' என்றெண்ணிய உமா அந்த வெற்றியை உறுதி செய்து கொள்ளவும், பூரணமாக்கிக் கொள்ளவும் அவசரப்பட்டாள்.

''நானும் சதீஷும் ஒருவரை யொருவர் நேசிக்கிறோம் அப்பா....''

சதீஷ்?

சதாசிவத்துக்கு மீண்டும் ஓர் அதிர்ச்சி.



''சிமிண்ட்டிலே நிறைய மணல் கலந்து அரசாங்கக்கட்டிடங்கள் கட்டினார்னு அந்தக் கண்ட்ராக்டரை அஞ்சு வருஷம் ஜெயிலிலே போட்டாங்க! ரெண்டாம் நாளே தப்பிச்சுண்டு ஓடிட்டார்!''

''எப்படி?''

''அந்த ஜெயிலும் அவர் கண்ட்ராக்டிலே கட்டினதாச்சே! ஈஸியா சுவத்தைப் பெயர்த்துண்டு கிளம்பிட்டார்!''

-அ. இராமதாஸ்

தன்னுடைய 'ஸ்பெஷல் கிளாஸ்' பொய் வெளிப்பட்டுப் போன உண்மை நொடியில் புரிந்துவிட்டது அவளுக்கு.

ஆரம்பத்தில் அவருடைய கையை ஓங்க விட்டுவிட்டால் எல்லாமே கெட்டுப்போகும்.

துணிந்துவிட்டாள் உமா.

நழுவி நழுவிப் போய்க் கொண்டிருந்த தைரியத்தை நெஞ்சில் ஒன்றுகூட்டி நிலைப்படுத்தி, தாழ்ந்திருந்த பார்வையை நேராக்கி அப்பாவை ஒரு கணம் தீர்க்கமாகப் பார்த்தாள்.

''என் பாய் பிரண்டைச் சந்திக்கப் போயிருந்தேன்.''

இதைச் சொல்லிவிட்டு அங்கே ஒரு பிரளயத்தையே எதிர்பார்த்துக் கண்களை இறுக மூடிக்கொண்டு விட்டாள் உமா.

இடிவிழுந்தவர் போலானார் சதாசிவம்.

அலுவலகத்திலிருந்து வரும் வழியில் உமாவின் வகுப்புத் தோழி வதனாவைக் கடைத் தெருவில் பார்த்தார். அவர் மனம் துணுக்

சதீஷைப் பற்றி அவர் நிறையவே கேள்விப்பட்டிருக்கிறார். –அப்பாவிப் பெண்களை ஆசை காட்டி மோசம் செய்யும் பணக்கார வீட்டு விளையாட்டுப்பிள்ளை என்று.

'உமாவை ஒழுக்கமுள்ள பெண்ணாக வளர்க்க நான் கையாண்ட கடுத்தமான வழிமுறைகள் மிக மோசமாகத்தான் தோற்றுப்போய்விட்டன' என்றெண்ணிக் கொண்டார் சதாசிவம்.

மிஞ்சிக்கொண்டு நிற்கும் மகளைப் பார்த்தார்.

அவளைத் தம் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொள்ள அவர் நம்பியிருந்த 'கண்டிப்பும் கறாரும்' செல்லாக் காசாக்கிவிட்ட உண்மை புரிந்தது. மகளுக்கு முன் நிராயுதபாணியாக நிற்பதான பிரமையில் செயல் இழந்து சோர்ந்து சோபாவில் சரிந்தார் சதாசிவம்.

இந்த மௌனம் ஒரு வகையில் அவளுக்குச் சாதகமே. அவள் சொல்ல நினைத்ததை

இடையூறு இல்லாமல் சொல்லி முடித்து விடலாமல்லவா?

''அப்பா...அவர் பெரிய பணக்கார வீட்டுப் பிள்ளை. நம்மை விட அந்தஸ்தில் பல படிகள் உயர்ந்தவர்.... ஆனால் என்னிடம் எத்தனை அன்பாகப் பழகுகிறார் தெரியுமா?''

இறுகிப் போயிருந்த சதாசிவம் ஒன்றுமே பேசவில்லை.

''அப்பா... சுதந்திரமாய்ப் பறந்து திரிய வேண்டிய பறவையைக் கூண்டுக்குள் 'பாதுகாப்பாக' அடைத்து வைக்க நினைக்கும் உங்களுடைய பத்தாம் பசலித்தனம் அர்த்தமில்லாதது.''

சதாசிவத்தின் புருவம் உயர்ந்தது.

'ஒன்றுமே தெரியாது என்று நான் எண்ணிக் கொண்டிருந்த உமாவா இப்படிப் பேசுகிறாள்?'

''நான் இன்னமும் சின்னப் பெண் இல்லை நல்லது கெட்டது தெரியாமல் போவதற்கு. என்னைப் புரிந்து கொண்டு உங்கள் கட்டுப் பாட்டைத் தளர்த்தி என் உணர்ச்சிகளுக்கு நீங்கள் சுதந்திரம் தரவேண்டும்.''

''.......''

தான்மட்டும் மேலே பேசிக் கொண்டு போவது அர்த்தமற்றதாகப் பட்டது உமாவுக்கு. அப்பா வாயைத் திறந்து பேசினால் நல்லது என்று நினைக்கத் தொடங்கினாள். 'ஆமாம்....ஒன்றுமே பேசாமல் தொடர்ந்து மௌனத்தைக் கடைப்பிடிப்பதன் மூலம் 'அரூப'மாகி நிற்பவரை நோக்கி எப்படிக் குறிபார்த்துக் கணை தொடுப்பது... வெல்வது?'

''நீங்கள் நினைப்பது போல் நான் ஒன்றும் கெட்டுப் போய்விடவில்லை...''

''.......''

''சதீஷ் என்னை மணந்து கொள்வதாக வாக்களித்திருக்கிறார்.''

''......''

அப்பாவின் மௌனம் காரணமில்லாமல் எரிச்சலூட்டியது உமாவுக்கு. என்ன நெஞ்சழுத்தம் இவருக்கு என்றொரு எண்ணக் கீற்று எழுந்தது.

''இவள் கத்தினால் கத்திவிட்டுப் போகட்டும்... நம்மை மீறி என்ன நடந்துவிடும் பார்க்கலாம் என்று தப்புக் கணக்குப் போட்டீர்களானால் நிச்சயம் ஏமாந்துதான் போவீர்கள்...''

—நிஜமாகவே கத்தினாள் உமா.

ஊஹூம். சதாசிவம் அசையவே யில்லை.

அவருடைய மௌனம் மெள்ள மெள்ளத் தன்மீது ஒரு பாதிப்பை ஏற்படுத்தி ஆதிக்கம் செலுத்த முற்படுவதை உணர்ந்த உமா திடுக்கிட்டுப் போனாள்.

சொல்ல விரும்பியதைச் சீக்கிரமே சொல்லி முடித்துவிட்டு அங்கிருந்து ஓடிப்போய்விட வேண்டும்போல் ஒரு துடிப்பு.

''இது என்னுடைய வாழ்க்கைப் பிரச்னை. உங்களுடைய அபிப்பிராயத்தை என் மீது திணிக்க முயற்சி செய்யாதீர்கள்...''

''......''

''நீங்கள் எங்களுடைய காதலை அங்கீகரித்து ஏற்றுக்கொள்ள வேண்டும். இல்லாவிடில்—''



உணர்ச்சிப் பின்னலில் வார்த்தைகள் வராமல் தடைப்பட்டன. காரணமில்லாமல் கண்களில் நீர் துளிர்த்து நின்றது.

மூச்சை நன்றாக இழுத்து வாங்கித் தன்னை ஆசுவாசப்படுத்திக்கொண்டு மேலேதொடர்ந்தாள் உமா.

''நீங்கள் சம்மதித்தால் எங்கள் திருமணம் சம்பிரதாய முறைப்படி நடக்கும். இல்லாவிடில் எப்படியும் எங்கள் திருமணம் நடந்தே தீரும்...''

''.......''

''நீங்கள் குறுக்கே விழுந்து தடுக்க முயன்றாலும் உங்கள் முயற்சி வெற்றிபெறாது.''

''......''

''சட்டம் எங்கள் பக்கம்தான். ஞாபகமிருக்கட்டும்.''

—ஆவேசமே வந்து விட்டாற்போல் கோபாவேசமாகச் சுட்டு விரலை ஆட்டிப் பேசிய உமா இன்னமும் கலையாத அப்பாவின் அசாதாரண மௌனம் தன்மீது அழுத்தமாகப் படிந்து உடும்புப் பிடியாய் இறுக்குவதை உணர்ந்தாள்.

அவளுக்கு மூச்சுத் திணறல் எடுத்தது.

அங்கேயிருந்து ஓடிப்போய்விடத் துடித்தாள். கால்கள் ஒத்துழைக்க மறுத்தன.

ஓரிரு விநாடிகளில் மூச்சோட்டம் நின்று போய்விடுமோ என்ற மிரட்சி அவளை ஆட்கொண்டது.

தாங்க முடியாத அந்த மரணவஸ்தையிலிருந்து விடுபட வேண்டும் என்ற துடிப்பில்...

என்ன செய்கிறோம் என்ற பிரக்ஞையே இல்லாமல் — அனிச்சையாக 'ஓ'வென்று பெருங் குரலில் கதறி அழுதபடி அப்பாவின் காலடியில் போய் விழுந்தாள்.

''என்னை மன்னிச்சுடுங்கப்பா...''

தமது கடும் வார்த்தைகளும் கண்டிப்பும் பயனற்றுப் போன இடத்தில் தமது மௌனமே வெற்றி பெற்று விட்டதைக் கண்ணுற்ற சதாசிவம் மேலும் திகைத்துப் போனார்.

● அருமையான அட்டைப் படம். இரண்டு விரல் தொப்பியில் காட்டுவது இரட்டை இலையா? இரண்டுக்கு மேல் வேண்டாம் என் பதா? அல்லது சர்ச்சில் காட்டிய விக்டரி சின்னமா?
திருநெல்வேலி ஜி. சதாசிவம்

● விஜய் அமிருதராஜ் விம்பிள்டனில் வெற்றி பெறவிட்டாலும் ஆடும் களத்தில் அவர் கையாளும் நேர்மையான வழிகளைப் படித்துப் பெருமிதம் அடைந்தேன். வெற் றியை எந்த விதத்தில் பெறுகிறோம் என்பது மிகவும் முக்கியம்.
சென்னை-28 எல். ஆர். விஜயகுமார்

● மக்வானா பேசியதைப் பத்திரிகைகளில் படித்து வேதனைப்பட்டுக் கொண்டு இருந்த என் போன்றவர்களுக்கு கார்ட்டூனிஸ்ட் உமாபதி அமைச்சரின் தலையில் ஒரு தட்டுத் தட்டியதைப் பார்த்தபோது உண்மையி லேயே பூரிப்பாக இருந்தது.
மதுரை-1 சு. பாலமூர்த்தி

● முதல் பக்கத்தில் மாணவி அல்லா மிஸ் ஸிக் சாதிக்கிறார். தலையங்கத்தில் விஜய் சாதிக்கிறார். செம்பியன் கட்டுரையில் 'மாதாஜி' சாதிக்கிறார். உள்ளே அனந்தன் சாதிக்கிறார். கோவி. மணி சேகரன் கதையில் திருநாராயணப் பட்டர் சாதிக்கிறார். எல்லாமே சாதனையாக இருக்கின்றதே! சாதனை மலரோ?
களமருதூர் கிணவை ரமணி

● அப்பாடா! வெகு நாளைக்குப் பிறகு செம்பியன் கட்டுரை வந்துள்ளதே என்று வெகு ஆர்வமாகப் படித்தேன். ஆமாம், இந்திராவைக் கிண்டல் செய்யவில்லை என்றால் உங்களுக்குத் தூக்கமே வராதா?.
கதிரிமங்கலம் வி. ரங்கநாதன்

● இந்திரா அம்மையாரைப் புகழ்ந்து எழுது வதில் போட்டா போட்டியாக இங்கு பல பத்திரிகைகள் செயல்பட்டுக்கொண்டிருக்கின் றன. அம்மையாரின் உண்மை உருவத்தைப் படம் போட்டுக் காட்டிவரும் கல்கி போன்ற ஒன்று இரண்டு பத்திரிகைகள் கூட கையில் ஜால்ராவைப் பிடித்துக் கொள்ள வேண்டு மென்று எவரேனும் ஆசைப் பட்டால், அவர்கள், எதிர்ப்புக் குரலே நாட்டில் இருக்கக் கூடாது என்ற இந்திராவின் கொள்கையை ஏற்றவர்களாகத்தான் இருப்பார்கள். கல்கி, அவர்களுக்கு அடிபணிந்துவிடக் கூடாது.
சிதம்பரம் சிவ. ராஜகுமார்

● ஜே. எஸ். ராகவனின் ''ஒரு எழுத் தாளரும் ஐந்து எடிட்டர்களும்'' கதையைப் படித்தேன். சமீபத்தில் இதைப் போன்ற உயர்ந்த ஹாஸ்யக் கதையைப் படித்ததில்லை. அதுசரி, பத்திரிகை உலக ஜாம்பவான்களான விகடன், குமுதம் ஆசிரியர்களை ''இதயம் பேசுகிறது'' ஆசிரியர் பின்னால் நிற்பதுபோல படம் போட்டிருக்கிறீரே, என்ன ''தில்'' உமக்கு?
மின்பாறை வெ. சியாமளா ரமணி




● ஜே. எஸ். ராகவனின் 'ஐந்து எடிட் டர்கள்' கதை ரொம்பப் பிரமாதம். கிட்டத் தட்ட நான் எழுதும் கதையை ரசிப்பது போல ரசித்தேன்!
புதுடில்லி ''அகஸ்தியன்''

● இன்றைய இளம் எழுத்தாளர்கள் நிறை யப்பேர் இப்படியான பகல் கனவில்தான் மிதந்து கொண்டிருக்கிறார்கள். ஐந்து எடிட் டர்கள் அல்ல; அவர்களின் துணை எடிட் டர்கள் அத்தனை பேரையும் கனவில் கண்டு வாய்ப்பைத் தேடிக் கொண்டு இருக்கிறார்கள்!
பெங்களூர் ப. மூர்த்தி

● கிண்டியா? கிண்டலா? நடு பக்க ஜோக்ஸ் அனைத்தும் மனத்தைக் கண்டி இழுத்து வண்டி வண்டியாகச் சிரிக்க வைத்தன.
சிவகாசி கே. ராகவன்

● 'ஆணவம்' சிறுகதையில் வரும் ''கடை சித் தடவையாக ஸ்கோலுக்குப் போயிட்டு வந்துடறேன்'' என்ற வரி மனத்தைத் தொட் டது. கதையின் முடிவும் நன்றாக இருந்தது.
விழுப்புரம் கே. ஜி. ராதாகிருஷ்ணன்

● இவ்வாரம் கல்கியில் எல்லா அம்சங் களும் சிறப்பாக இருந்தாலும், ருக்மிணி பார்த்தசாரதியின் ''தலை குனிவு'' சிறுகதைக் குத்தான் முதலிடம்.
குரோம்பேட்டை வி. தியாகு

● திரு நாராயண பட்டருக்கு மட்டுமா சொர்ணாபிஷேகம்? அழகு தமிழில் அருமை யானதோர் காவியத்தைத் தந்த மணிசே கரரே! பெற்றுக்கொள்ளும் எங்களது வாழ்த் தபிஷேகத்தை!
சென்னை-63 எல். ரவி சங்கர்

● ''அகப்பட்டுக்கொண்டார்கள்'' பகுதி யில் எஸ். சந்திரமௌளி வழங்கிய துணுக் கைப் படித்தேன். கென்யாவில் உள்ளதைப் போல் இங்கும் சம்பளச் சட்டத்தை அமுல் செய்தால் என்ன? சாராய, கள் யுகத்தில் சில குடும்பங்கள் அரை வயிறு கஞ்சியாவது குடிக்க உதவியாக இருக்குமே!
மேட்டுப்பாளையம் எம். பி. ரத்னகுமார்

● ''தே. மா. ப. கண்டல்'' பகுதி ''தொ. வ. எ. கே. கொ.'' (தொடர்ச்சியாக வரட்டும் எனக் கேட்டுக் கொள்கிறேன்.).
சென்னை-4 ஏ. சங்கர்




# நமக்குக் கிடைத்த லாபம் !

**வா**ய்ப் பாட்டிலே பலவித ரசங்களைப் பரிமளிக்கச் செய்தாலும் பக்திச் சுவையை வெளிப்படுத்துவது ரொம்ப சிரமம். அதை வாத்தியமிசைக்கும்போது விகசிக்கச் செய்வது அதைவிடக் கஷ்டம். இந்த அரிய காரியத்தை வெற்றிகரமாக நிறைவேற்றும் அபூர்வமான வித்வான்களில் ஒருவர் லால்குடி.

'பராத்பரா' கீர்த்தனையில் ''சரும்பே'' என்ற சொல்லை அவர் கையாள்கின்றபோது சக்கையாகவா இருக்கிறது? இறையுணர்வின் இதமெல்லாம், இனிமையெல்லாம், ரசமெல்லாம் வழிகிறதல்லவா? இப்படியே ஒவ்வொரு கீர்த்தனையின் ஒவ்வொரு அடியையும், வரியையும் வார்த்தையையும் பொருளுணர்ந்து நம்மையும் உணர்ந்து ரசிக்கச் செய்கிறவர் லால்குடி ஜெயராமன்.

அதுவும் பம்பாய் சங்கர மடத்துக் கென்றே அவர் நிகழ்த்திய கச்சேரியில் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்ததில் வியப்பில்லை. அந்தக் கச்சேரியின் சில பகுதிகள் ஓர் எல். பி. இசைத்தட்டாக இப்போது வெளியாகியிருக்கிறது.

கரகோஷத்துடன் ஆரம்பமாகும் இசைத்தட்டு கரவொலியுடன் முடிந்து கச்சேரி சூழ்நிலையை நமது இல்லத்துக்குள்ளேயே உருவாக்கிவிடுகிறது. தொடக்கத்தில் ஓர் இனிய பெண் குரல் இரண்டே வாக்கியங்களில் வரவேற்புக் கூறுகிறது. தொடர்ந்து நாகஸ்வராவளி ராகம் கம்பீரமாக ஒலிக்கிறது. கீர்த்தனை மகாவைத்தியநாத சிவன் இயற்றிய 'சங்கர குரு வரம்'.

இது மட்டுமின்றி எல்லாப் பாடல்களுமே ஈசனைப் பற்றியோ அம்பாளைக் குறித்தோ சங்கராசாரியாரைப் போற்றுவதாகவோ அழகாகத் தேர்ந்தெடுத்திருக்கிறார் லால்குடி. பாவ பூர்வமான ராகங்களில் அமைந்த பாவ பூர்வமான சாகித்யங்கள். துவஜாவந்தியில் 'அகிலாண்டேஸ்வரி'; சங்கராபரணத்தில் சுப்பராம தீக்ஷிதரின் 'சங்கராசார்யம்'. 'எப்போ வருவாரோ'—வேறு ஒரு ராகத்தில் அமைந்திருந்தால் இந்த அளவு விரகதாபமும் ஏக்க பாவமும் விகசிக்குமா?

ஜி. ஜே. ஆர். கிருஷ்ணனுக்கு இது முதல் இசைத்தட்டு. அவரை அறிமுகம் செய்விக்கிற வாய்ப்புக் கிட்டியதில் எச். எம். வி.கே பெருமை பிடிபடவில்லையாம், மேலுரை சொல்லுகிறது. வியப்பில்லை தான்; அவர் வாசிப்பைக் கேட்கவே நமக்குப் பெருமையாக இருக்கிறதே!

காரைக்குடி மணியும், விநாயகராமும் எந்தக் கச்சேரியும் களைகட்ட உதவக் கூடியவர்கள்; இந்தக் கச்சேரியை 'ஓஹோ' என்று உயர்த்தி யிருக்கிறார்கள்.

இசைத்தட்டின் ராயல்டி முழுவதும் பம்பாய் சங்கர மடத்துக்குப் போகிறது; பக்தி வளர்த்த புண்ணியம் முற்றிலும் இசைவாணர்களைச் சென்றடைகிறது; பரம சௌக்கியமும், சாந்தியும் நமக்குக் கிடைக்கிறது!

-குட்டிகிருஷ்ணன்

**மனவாசம்**

திரு. கண்ணதாசன் அமெரிக்கா சென்றிருப்பதால் மனவாசம் தொடரை நிறுத்தி வைக்க நேர்ந்திருக்கிறது.

-ஆசிரியர்

▣ இசைத்தட்டு வெளியீட்டு விழாவில்: லால்குடி; பாபா அணுசக்தி நிலையத் தலைவர் சேத்னா: பென்னட் கோல்மன் நிறுவன நிர்வாக டைரக்டர் ராம்தர்னேஜா: பம்பாய் தூர்தர்சன் நிர்வாகி திரு நாராயணன்; இந்தியன் ஆயில் ஜெனரல் மானேஜரும் பம்பாய் சங்கரமடம் துணைத் தலைவருமான ஜயராமன்.

# தமிழிசை இயக்கத்தை தொடங்கி வைத்தவர்



ராஜா சர்.

பாரதி பயன்படுத்திய ராகம், தாளம் ஆகியவையெல்லாம் பழையவைதானென்றாலும், அவன் தான் புனைந்த இசைப் பாடல்களிலே புதுமை நிகழ்த்தினான்.

டி. கே. சி., சர் ஆ., கே. சண்முகம், ராஜாஜி, 'கல்கி' கிருஷ்ணமூர்த்தி ஆகியோருடைய ஒத்துழைப்பைப் பெற்று ராஜா சர் அண்ணாமலை செட்டியார் தமிழிசை இயக்கத்தைத் தொடங்கியது 1941ல்தான்! அதற்கு முப்பதாண்டுகட்கு முன்பே தமிழ் நாட்டு இசை அரங்குகளிலே தமிழில்தான் பாடவேண்டும் என்று எழுதினார், பேசினார் பாரதியார்.

''தமிழ்ச் சபைகளிலே எப்போதும் அர்த்தம் தெரியாத பிற பாஷைகளில் பழம் பாட்டுக்களை மீட்டும் மீட்டும் சொல்லுதல் நியாயமில்லை. அதனால், நமது ஜாதி சங்கீத ஞானத்தை இழந்து போகும்படி நேரிடும்'' என்று பாரதியார் சொல்லுகிறார்.

இப்படிச் சொல்லுவதால், சம்ஸ்கிருதத்திலும் தெலுங்கிலும் பாடிய வித்வான்களின் பாடல்களைப் பாரதி வெறுத்தானென்று யாரும் எண்ணிவிட வேண்டாம். அதைப் பற்றி அவனே சொல்லுகிறான் கேளுங்கள்:

''பூர்விக மகான்களுடைய பாட்டுக்களை மறந்து போய்விட வேண்டும் என்பது என்னுடைய கட்சியன்று. அவற்றை அர்த்தத்துடன் பாட வேண்டும். பதங்களைப் பிழையாக உச்சரிக்கக் கூடாது.

''பத்து முப்பது கீர்த்தனங்களையே ஓயாமற் பாடி சங்கீதத்தை ஒரு தொல்லையாகச் செய்துவிடக் கூடாது.''

பாடப்படும் பாட்டின் பொருளைப் புரிந்து கொண்டு பாடவும் ரசிக்கவும் வேண்டுமானால் தமிழ் மக்கள் மத்தியில் தமிழில்தான் பாட வேண்டும் என்பது பாரதியார் கட்சி. அதனாற்றான், பாடுவோருக்கும் கேட்போருக்கும் புரியாத சம்ஸ்கிருத, தெலுங்கு மொழிகளில் பாடுவதை பாரதி எதிர்த்துக் குரல் கொடுத்தார். இதோ அவரே சொல்லுகிறார்:

''முத்துசாமி தீட்சிதர், தியாகையர், பட்டணம் சுப்பிரமணிய அய்யர் இந்த மூன்று பெயருடைய கீர்த்தனைகள்தான் வழக்கத்தில் அதிகமாய்ப் பாடுகிறார்கள். இவற்றுள்ளே தீட்சிதரின் கீர்த்தனைகள் பச்சை சம்ஸ்கிருத பாஷையிலே எழுதப்பட்டவை. இவை கங்கா நதியைப் போலே கம்பீர நடையும், பெருந்தன்மையும் உடையன. வேறு பல நல்ல லக்ஷணங்களும் இருந்த போதிலும் ஸம்ஸ்கிருத பாஷையில் எழுதப்பட்டிருப்பதால், இவை நமது நாட்டுப் பொதுஜனங்கள் ரஸாநுபவத்துடன் பாடுவதற்குப் பயன்பட மாட்டா.''

பாரதிக்கு சம்ஸ்கிருதத்திலும் தெலுங்கிலும் போதிய ஞானம் இருந்தது. அதனால் அந்த மொழியில் சங்கீத வித்வான்கள் பாடுவதை அவன் புரிந்து கொண்டு ரசித்ததுமுண்டு. தானேயும் சம்ஸ்கிருத—தெலுங்குப் பாடல்களைப் பாடி மகிழ்வதுண்டு. என்று அவருடைய அருமை மகள் சகுந்தலா பாரதி 'என் தந்தை' என்ற நூலில் கூறுகிறார். ஆயினும், பாரதி வாழ்க்கையிலே ஒவ்வொரு துறையிலும் மக்கள் புரிந்து கொண்டும், தெரிந்து கொண்டும் வாழ வேண்டும் என்று விரும்பினான். 'இசை இசைக்காகவே' என்னும் பூர்ஷ்வாக் கோஷத்துக்கு எதிராக 'இசையும் மக்களுக்காகவே' என்ற கொள்கையையும் அவர் கொண்டிருந்தார். அதனால் இசையரங்கிலே, தெலுங்கும் சம்ஸ்கிருதமும் பெற்றிருந்த ஆதிக்கத்துக்கு எதிராகத் தமிழிசை இயக்கத்தைத் தொடங்கி வைத்தான்.

பாரதியார் பொருளுக்காகவே பாட்டு என்று கருதினார். அந்தப் பொருள் 'நவரசம்' என்று சொன்னார். கச்சேரிகளிலே பாடும் வித்வான்கள் ரச ஞானத்துடன் பாட வேண்டும் என்பது அவருடைய கட்சி. கேட்பவர்களும் ரச ஞானத்துக்காகவே கேட்க வேண்டும் என்றும் அவர் சொன்னார். ''நவரசம்'', என்று பாரதி கூறுவது, வீரம், கோபம், வியப்பு, சாந்தம், அச்சம், வெறுப்பு, நகை, கருணை, சிருங்காரம் ஆகியவற்றையாகும்.

''பொருளிலும் ஓசையிலும் 'ரஸம்' கலக்காத பாட்டு இனிமேல் தமிழ் நாட்டிலேயே வழங்கலாகாது'' என்று அவர் சொல்கிறார்.

''ரஸஞானமில்லாதபடி பல்லவிகளும், கீர்த்தனைகளும் பாடுவோர் ஸங்கீதத்தின் உயிரை நீக்கிவிட்டு வெற்றுடலை — அதாவது பிணத்தைக் காட்டுகிறார்கள். ஸங்கீதத்துக்கு நவரஸங்களே உயிர்'' என்றும் பாரதியார் எழுதியிருக்கிறார்.

(மயிலை இலக்கிய வட்டம் பாரதீய வித்யாபவனச் சொற்பொழிவிலிருந்து)

ம.பொ.சி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor : K. Rajendran





ஆரோக்கியமான பற்களுக்கும் ஈறுகளுக்கும் என்றுமே ஆதாரம்
நம்பகமான கிராம்புத் தைலம் அது தருமே பரிகாரம்

புதிய

இதோ

# ப்ராமிஸ் டூத் பவுடர்

## காலங்காலமாக பயன்பட்டு வரும் கிராம்புத் தைலம் கொண்டது.




கிராம்புத் தைலம் கொண்ட
ப்ராமிஸ் டூத் பவுடர்
அளிக்கும் நன்மையைப் பாருங்கள்.

- வாய்த் துர்நாற்றத்தையும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளையும் அகற்றுகிறது.
- உங்கள் சுவாசத்திற்கு புத்துணர்ச்சியையும் தூய்மையையும் தருகிறது.
- உங்கள் ஈறுகளை இதமாகத் தேய்த்துக் கொடுத்து ஆரோக்கியத்தை உண்டாக்குகிறது.
- உங்கள் பற்களுக்கு பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது.
- பெப்பர்மிண்ட் மற்றும் கிராம்புத தைலத்தின் இணையற்ற சுவை.

பல்சாரா

**கிராம்புத் தைலம் கொண்ட புதிய இணையற்ற ப்ராமிஸ் டூத் பவுடர்**

CHAITRA-BLS-436 TAM

# JOHNSON

# மிக்ஸர் கிரைண்டர்

## புதிதாக மாற்றியமைக்கப்பட்டதால் மேன்மையாக இயங்குகிறது: விரைவாகவே குளிர்ச்சியடைகிறது.

தீவிர ஆராய்ச்சி மற்றும் கடும் உழைப்பின் விளைவாக ஜான்ஸன் அளிக்கும் புதிய, மேன் படுத்தப்பட்ட மிக்சர்-கிரைண்டர் எல்லா வேலைகளையும் சிறப்பின் சிகரமாகச் செய்கிறது.




**குளிர்ச்சியூட்டும் புது அம்சங்கள் பாரீர்!**

**முழுமையான செயலாற்றலுக்காக தனிச்சிறப்பு வாய்ந்த பிளேடுகள்**

இரு கிண்ணங்களிலும் அமைக்கப்பட்ட புதிய பிளேடுகள் மேலும், கீழும் மற்றும் சுழன்றும் இயங்குவதால் முழுமை யான செயலாற்றல் கிடைக்கிறது. கட்டிகளோ, தானியங்களோ இருக்க வாய்ப்பில்லை.

**மேல்பாகத்தில் இடைவெளி இருப்பதால் துரித குளிர்ச்சி**

சூடான காற்று துரித மாக மேல்பாக இடை வெளியிலிருந்து வெளி யேறுவதால் மோட்டார் சூடாகாமல 45 நிமிடங்கள் தடை யின்றி இயங்க முடிகிறது. சாதாரணமாக மோட்டார் எரிந்து விடும் அபாயமில்லை.

**புதிய கலவை கிண்ணம் தாராள மான காற்றோட்டத்திற்கென.**

கலவைகிண்ணத்தின் வளைந்த உட்பாகம் பிளேட் இயங்குவதற்கு வாகாக அமைக்கப்பட் டிருக்கிறது. சீரான கலவை கிடைப்பதோடு சரியான அளவுதான் இதில் அடங்கும்.

**எவர்சில்வர் கிண்ணத்தில் சீரியமுறையில் அமைக்கப்பட்ட கைப்பிடி**

சீரிய முறையில் அமைக்கப் பட்ட கைப்பிடி எவர்சில்வர் கிண்ணத்தைக் கையாள எளிதாகவும், சௌகரிய மாகவும் இருக்கிறது.

**சுகாதாரத்திற்கென இரு கிண்ணங்கள்; பாதுகாப்புக் கென இரு பிளேடுகள்**

இரு தனி கிண்ணங் கள் இருப்பதால கலவை செய்தவுடன் கழுவும் தொல்லை யில்லை. வேறு கிண்ணத்தில் அரைக்கலாம். சிரமம் குறைவு. மில்க் ஷேக்கு களில் மசாலா மணம் கலப்பதில்லை. உறுதியாக இணைக்கப்பட்ட பிளேடு கள் முழுமையாக பாதுகாப்பு அளிக்கின்றன. இயங்கும்போது பிளேடுகள் பறந்து செல்லும் அபாயமில்லை.

**ஜான்ஸன் மிக்ஸர் கிரைண்டரின் முதன்மையான சிறப்பு அம்சங் களும் இதிலே உள்ளன.**

- துப்புரவாகச் சுத்தம் செய்ய எளி தாகக் கழற்றக்கூடிய பாகங்கள்
- செம்மையாக வேகத்தை மாற்ற மேன்மையான இஞ்சர் விசை.
- ஒரு வருட உத்திரவாதம் மற்றும் சிறப்பான பின் விற்பனை பணி.

**JOHNSON**

ஆற்றலிலும், இயக்கத்திலும் இணையிலாச் சிறப்பு கொண்டது.

Parade/BE/8122

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka